


# ரூபா

"நீலத் திரைக் கடலில்—நின்றன்
நீண்ட குழல் தோன்றுதடி!"

— அமரகவி பாரதியார்

- அடர்ந்து படர்ந்த நீண்ட கரும் கேச வளர்ச்சிக்கு ரூபா டானிக் ஹேர் ஆயில்.

- ரூபா டானிக் ஹேர் ஆயில் பவித்ரமான பச்சிலை மூலிகைகளினால் பண்டைகால சாஸ்திரிய முறைப்படி தயாரிக்கப்பட்டது. கலப்படமற்றது.
- இதை நாரீமணிகளும் புருஷர்களும் தவறாமல் உபயோகித்து வந்தால், உஷ்ணத்தைத் தணித்து ஓர் குதூகலமான உணர்ச்சியை அளிப்பதுடன் கேசத்தை வளரச் செய்து உங்களது ரூப-லாவண்யத்தை அதிகப்படுத்துகிறது.
- இதுவும் பிரசித்தி பெற்ற ஐடெக்ஸ் கண் மை தயாரிக்கும் அமிந் லேபாடரியால் தயாரிக்கப்பட்டது.

எல்லா ஷாப்புகளிலும் கிடைக்கும்

விநியோகிப்பவர்கள்: புஷ்பவனம் ஸ்டோர்ஸ், திருவல்லிக்கேணி, சென்னை-5

# அநுமகரத்வஜா

ஷட்குண மகரத்வஜா

சக்தி வாய்ந்தது



சுத்தமான ஷட்குணத் தங்கத்தினால் மிகவும் சிறிய அளவில் ஆனால் பிரமாத சக்தி வாய்ந்ததாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத்திரை வடிவம் ஆக்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பதற்கு மிகவும் சுலபம். மற்ற மகரத்வஜங்களை விடச் சக்தி வாய்ந்தது.

●

14 மாத்திரைகள் ஒரு புட்டியில் இருக்கின்றன. (7 முழு அளவுகள்)

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா :: பம்பாய்

ஏஜண்டுகள் :

என். தேசாய் கௌண்டர் & கோ.,

14, பந்தர் தெரு, சென்னை

# அஜீரணமா?




வயிற்றில் அதிக அமிலத் சேருவதால் எரிச்சல், வாயு உபம் திரவம் இதர உபாதைகளும் ஏற்படலாம். அதை நிவர்த்திக்க "பிஸ்மாக்" போன்ற மாற்று வேறு இல்லை. வயிறு சரிவர வேலை செய்யப் போதிய சக்தியை அளிக்கிறது. வயிற்று நோயால் அவதியுறுபவர்களுக்கு "பிஸ்மாக்" சிபார்சு செய்கிறேன். பரிசீலியுங்கள் மூன்றே நிமிஷங்களில் குணம் தெரியும்.

உங்களுக்கு வேண்டியது

எல்லா கெமிஸ்டுகளிடமும் ஸ்டோர்களிலும் பவுடராகவும் மாத்திரையாகவும் கிடைக்கும்.

## BISMAG

இந்தியாவுக்கு பூரா விநியோகஸ்தர்கள் :

ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்.

பம்பாய் - கல்கத்தா - டெல்லி - மதராஸ்

# 'பாலுட்ரின்'

Trade Mark

மலேரியாவிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுவதற்கு

## இப்பொழுது
## கடைகளில் கிடைக்கிறது

**புதிய வாராந்திர மாத்திரை**




## புதிய இகானமி ஸ்டிரிப்பில்

பாலுட்ரின் இப்பொழுது ஒரு புதிய, பெரிய அளவை, 0·3 கிராம் மாத்திரையாக கிடைக்கிறது. இந்த புதிய மாத்திரை உங்களை மலேரியாவிலிருந்து ஒரு வாரம் வரை பாதுகாக்கிறது. மலேரியாவினால் கஷ்டப்படும் பொழுது, ஜுரம் இறங்கும் வரை, தினம் ஒரு மாத்திரை சாப்பிடவும்.

இந்தப் புதிய மாத்திரைகள், சுத்தமான முறையில், ஒரு ஸ்டிரிப்பில் 8 மாத்திரைகள் வீதம் பாக் செய்யப்பட்டிருக்கிறது. இவைகள் சீதோஷ்ணத்தால் பாதிக்கப் படாதவை.



ஒரு ஸ்டிரிப்பின் விலை 8 அணா
அல்லது ஒரு மாத்திரையின் விலை
**ஒரு அணா**




இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிட்.

# காட்ஸ்வால்



அவர்களுக்கு

உஷ்ணவேளையில் **குளுமையும்**



குளிர்ந்த வேளையில்

**கதகதப்பும்**

எக்காலத்திலும்

**ஆரோக்கியமும்**

அளிக்கின்றது!



குழந்தைகளுக்கு ஜலதோஷம் பிடிக்கும் சமயம் விளையாட்டுகளுக்குப் பிறகுதான் என்பதை தாய்மார்கள் அறிவர். ஏனெனில் இது சகஜம். தாய்மாரின் பிரச்னையை தீர்ப்பது இவ்வற்புத ஜவுளியே! பிரத்தியேக நெசவின் காரணமாக இது சிறுவர்களுடைய இளந்தேகத்தின் சீதோஷ்ண நிலையை சமப்படுத்தி, அதிக உஷ்ணமோ குளிர்ச்சியோ வராமல் தடுக்கிறது. காட்ஸ்வால் மிருதுவாக இருப்பது தவிர பார்வைக்கும் வெகு அழகு. தாய்மார்கள் தங்களுக்காகவும் 'காட்ஸ்வால்' ஆடையணிகளை பெரிதும் விரும்புவர்.



> சலவை விதிகள்: கம்பளித்துணிகளைப் போன்று சோப்புச் செதில், வாஷிங் சோப்பு உபயோகித்து வெதுவெதுப்பான ஜலத்தில் சலவை செய்யவும்

தயாரிப்பாளர்கள்:

## தி பெங்களூர் மில்ஸ்

[illegible]

பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்



கரையோரம் இப்பெயரை கவனியுங்கள்: காட்ஸ்வால்
—பெயர்பெற்ற துணிமணிகளையும்!

அவர்கள் மேஜையை உபயோகிக்கிறார்கள்...



அவர்கள் உபயோகிப்பது





பகுஸும்

டானிக் குணங்களுடன் கூடிய ஹேர் ஆயில்



C. K. ஸென் & கோ., லிட்.,

ஜபகுஸும் ஹவுஸ், கல்கத்தா-12

CJX 4 TM



# கல்கி பொருளடக்கம்




மலர் 8 இதழ் 46 | ஜூன் 12 | விரோதி ௵ வைகாசி 30உ




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.

உலகத்தை இயக்கும் சக்திகளுக்குள்ளே மிகவும் மகிமை வாய்ந்தது பக்தி என்னும் சக்திதான் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். பக்தி என்னும் சக்தியினால் அனுமார் ஆழ்கடலைத் தாண்டினார். பக்தி என்னும் சக்தியினாலேதான் காந்திமகான் இந்தியாவுக்குச் சுதந்திரம் பெற்றளித்தார்.




இந்தக் காலத்தில் தமிழ்நாட்டில் நாஸ்திகப் பிரசாரம் அதிகமாகி வருகிற தென்று அடிக்கடி கேள்விப்படுகிறோம். ஆனால் இதே காலத்தில் தமிழ்நாட்டில் ஆஸ்திகமும் பக்தியும் வேரூன்றித் தழைத்து வருகிறது. நாஸ்திகப் பிரசாரம் எவ்வளவுக்கு ஓங்குகிறதோ அவ்வளவுக்கு உண்மையான பக்தி பரவி வருகிறது என்று சொல்வதும் மிகையாகாது. இந்தக் "கல்கி" இதழ் அட்டைப் படத்தைப் பாருங்கள்! அதில் வட்டத்துக்குள்ளே இருக்கும் அற்புதமான கலைப் பண்பு வாய்ந்த வெள்ளி ரதம் சமீபத்தில் பழனி ஆண்டவர் கோயிலுக்கு முருகன் அடியார் ஒருவரால் செய்து அளிக்கப்பட்டது. இந்தத் திருப்பணியைச் செய்த பக்த சிரோமணி ஈரோடு வர்த்தகச் செல்வர் ஸ்ரீ வி. வி. சி. ஆர். முருகேச முதலியார் அவர்கள். ஆண்டிப் பண்டாரமாகிய பழனிமலை முருகனுக்கு வெள்ளி ரதம் வேண்டியது தானா என்றெல்லாம் நாம் ஆராய வேண்டியதில்லை. நாற்பது ஆயிரம் ரூபாய் செலவழித்து வெள்ளி ரதத் திருப்பணி செய்த ஸ்ரீ முருகேச முதலியார் அவர்களின் பக்தி மகிமையைப் பாராட்டி நாம் மகிழ வேண்டும். வெள்ளி ரதத் திருப்பணிக்கு அடிப்படையாக இருந்த ஸ்ரீ முதலியாரின் பக்தி மற்றும் பல அற்புதங்களையும் செய்ய வல்லது என்பதை நாம் உணர வேண்டும்.




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 46

## என்ன சேதி?

### அதிர்ஷ்ட ரயில் வண்டி

சென்னை மாகாண அரசியலில் சில காலம் அமைதி குடி கொண்டிருந்தது. மந்திரி சபை விஸ்தரிப்புப் பேச்சு அடங்கியிருந்தது. திடீரென்று சென்ற வாரத்தில் ஒரு சிறு குமிழி புறப்பட்டது. 'ஸ்ரீ ரோச் விக்டோரியா உதகமண்டலத்துக்குப் புறப்படுகிறார்' என்ற செய்தி அரசியல் உலகில் சிறிது பரபரப்பை உண்டாக்கிற்று. மறுநாள் உதக மண்டலத்தில் மேன்மை தங்கிய பவநகர் சந்நிதானத்தில் ஸ்ரீ ரோச் விக்டோரியா மந்திரி பதவிக்குரிய விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார் என்ற செய்தி வந்தது. அதற்கு மறுநாள் காலையில் ஸ்ரீ ரோச் விக்டோரியாவின் நண்பர்கள் திரளாகச் சென்ட்ரல் ஸ்டேஷனுக்குச் சென்று சென்னை மாகாணத்தின் பன்னிரண்டாவது மந்திரிக்கு மாலைசூட்டி ஜே கோஷம் செய்து வரவேற்றார்கள்.

இனிமேல் சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து உதகமண்டலத்துக்குப் புறப்படும் புளூ மவுண்டன் எக்ஸ்பிரஸ் வண்டியைப் பத்திரிகை நிருபர்கள் தினந்தோறும் துருவி ஆராய்வார்கள் என்பதில் ஐயமில்லை. அந்த அதிர்ஷ்ட வண்டியில் ஏறி உதகமண்டலத்துக்குப் போகிறவர்களில் யார் கனம் மந்திரியாகத் திரும்பி வருவார்களோ, என்னமோ? கவனமாகப் பார்ப்பது அவசியந்தானே?

### கனம் மந்திரி ரோச்

புதிய மந்திரி கனம் ரோச் விக்டோரியா தமிழ்நாட்டு அரசியல் உலகத்துக்குப் புதியவர் அல்ல. நெடுநாளையக் காங்கிரஸ் வாதி. தூத்துக்குடி நகர சபைக்கு 1927-ம் வருஷம் முதல் 1947-ம் வருஷம் வரையில் இருபது வருஷ காலம் தலைவராயிருந்து வந்தவர். அவருடைய நண்பர் குழாம் விஸ்தாரமானது. ஸ்ரீ ரோச் விக்டோரியாவுக்கு மந்திரி பதவி கிடைக்க வேண்டும் என்பதில் அவரைக் காட்டிலும் அவருடைய சிநேகிதர்களுக்கு ஆர்வம் அதிகமாயிருந்தது.

ஸ்ரீ பெருமாள்சாமி ரெட்டியாரோடு ஸ்ரீ ரோச் விக்டோரியாவும் உதக மண்டலத்துக்கு ஏன் போகவில்லை என்பது ஒரு பெரிய மர்மமான பிரச்னையாகியிருந்தது. அவருடைய நண்பர்கள் பலர் துப்பறியும் நிபுணர்களை ஏற்படுத்தி ஆராயலாமா என்றுகூட யோசித்தார்கள். அவர்களுடைய மனதின் தாபம் இப்போது தீர்ந்திருக்கும் என்று நம்புகிறோம். ஸ்ரீ ரோச் விக்டோரியாவின் ஆற்றலில் அவருடைய நண்பர்களும் பிற காங்கிரஸ் வாதிகளும் வைத்திருக்கும் நம்பிக்கை வீண் போகாது என்றும் நம்புகிறோம்.

### இலாகா மாறுதல்

கனம் ரோச் விக்டோரியாவின் நியமனம் நமது மந்திரிகளிடையே சில இலாகா மாறுதல்களுக்குக் காரணமாயிருக்கிறது. சென்ற இரண்டு வருஷத்துக்கு மேலாக மிகக் கஷ்டமான உணவு இலாகாவை டாக்டர் ராஜன் நிர்வகித்துச் சென்னை மாகாணத்தைப் பஞ்சம் பட்டினியிலிருந்து காப்பாற்றினார். இந்த இலாகாவின் பளுவை வயது முதிர்ந்த தம்மால் தாங்க முடியவில்லையென்றும் வேறு வலிய இளந்தோள்களுக்கு மாற்ற விரும்புவதாகவும் டாக்டர் சொல்லிக் கொண்டிருந்தார். அவரிடமிருந்து கனம் ரோச் உணவு இலாகாவை ஏற்றுக் கொண்டிருக்கிறார். இம்மாகாண மக்களின் முக்கிய உணவுப் பண்டங்களில் ஒன்றான மீன் இலாகாவும் அவரிடம் சேர்ந்திருக்கிறது. கூடிய சீக்கிரம் ரேஷனை எடுத்துவிட வேண்டுமென்னும் நோக்கத்துடன் தாம் உணவு இலாகாவை நிர்வகிக்கப் போவதாகக் கனம் ரோச் சொல்லியிருக்கிறார். அந்த நோக்கத்தை நிறைவேற்றிவிட்டால் அவருடைய உத்தியோக காலத்தில் அது ஒரு மகத்தான

## 1980ல் நடந்த மந்திரி சபை வேலை நிறுத்தம் -நமது விசேஷ நிருபர் அறிக்கை













⑤ மாதர் விடுதலைச் சங்கத்தைச் சேர்ந்த பெண்மணிகள் அரசாங்கத்தை ஏற்று நடத்த முன்வருகிறார்கள்!


பெண்களின் மந்திரிசபை பிரமாத உற்சாகத்துடன் வேலை செய்ய ஆரம்பிக்கிறது. ⑥


⑦
பழைய ஆண் மந்திரிகள் வந்து தாங்கள் வேலை- யிருந்ததைக் முடிவு செய்து விட்டதாகப் பணிவுடன் தெரிவிக் -கின்றனர்.


மந்திரிகளையும் எம்.எல்.ஏ.க்களையும் ஸ்திரி போலீசார் பரிசோதனை செய்து உள்ளே அனுமதிக்கின்றனர்.
⑧
'க்யூ'வில் சரியாக நில்லுங்கள்.

சாதனையாயிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. நாகப்பட்டினத்துக் கடற்கரையோரத்தில் மீன்கள் துள்ளிக் குதித்துப் பறந்து விளையாடியதாகக் கேள்விப்பட்டோம். ஸ்ரீ ரோச் விக்டோரியாவிடம் மீன் இலாகா வரப்போகிறது என்பதைத் தெரிந்து கொண்டதால் அந்தக் கடல் மீன்கள் 'ஆடுவோமே, பள்ளுப் பாடுவோமே!' என்று ஆனந்தமாக ஆடிப்பாடி இருக்க வேண்டுமெனக் கருதுகிறோம்.

## வைத்தியமும் விவசாயமும்

**வை**த்திய சுகாதார இலாகா இதுவரை கனம் வெட்டி அவர்களிடம் இருந்தது. கனம் வெட்டியிடம் ஏன் வைத்திய இலாகா இதுவரை இருந்தது என்பதற்கு யாரும் இதுவரையில் தக்க காரணம் கண்டு பிடித்துச் சொல்லவில்லை. இனிக் காரணம் தேடவேண்டிய அவசியமுமில்லை. ஏனெனில் அந்த இலாகா இப்போது டாக்டர் ராஜனிடம் போயிருக்கிறது. 1938—39ல் டாக்டர் ராஜன் வைத்திய மந்திரியாயிருந்தபோது அந்த இலாகாவை ஐ. எம். எஸ். பிடியிலிருந்து விடுவித்துப் பல சீர்திருத்தங்களை நிறைவேற்றினார். செய்ய வேண்டிய பாக்கிச் சீர்திருத்தங்களையும் இப்போது செய்யச் சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. வியாதியஸ்தர்களைக் கவனித்துச் சிகிச்சை செய்வதோடு, வியாதியில்லாதவர்களுக்கு வியாதி வராமல் பார்த்துக் கொள்ளும் வழிகளையும் தேட வேண்டியது அவசியம்.

வைத்திய இலாகாவை டாக்டர் ராஜனிடம் கொடுத்துவிட்டுக் கனம் வெட்டி விவசாய இலாகாவை வாங்கிக் கொண்டிருக்கிறார். அத்துடன் மாட்டு வைத்திய இலாகாவையும் வைத்துக் கொண்டிருக்கிறார். சும்மா வைத்துக் கொண்டிருக்கட்டும்; அதைப் பற்றி மாடுகளுக்கு இல்லாத கவலை நமக்கு என்ன வந்தது?

## கல்வி பிழைக்குமா?

**தா**ற்காலிகமாகக் கனம் வெட்டியிடம் இருந்த கல்வி இலாகா கனம் மாதவ மேனனிடம் போய்ச் சேர்ந்திருக்கிறது. இப்போதுள்ள மந்திரி சபையில் எல்லாரையும் சரிக்கட்டிக்கொண்டு சமரசமாகப் போகக்கூடியவர் என்ற புகழைக் கனம் பக்தவத்ஸலம் அவர்களுக்கு அடுத்தபடியாகக் கனம் மாதவ மேனன் அடைந்திருக்கிறார். கனம் பக்தவத்ஸலத்தைப் போலவே சலிக்காத உழைப்பாளி என்ற பெயரும் பெற்றிருக்கிறார். இந்த இரண்டு குணங்களும் கல்வி இலாகா நிர்வாகத்துக்கு இப்போது அவசியமாயிருக்கிறது. கல்வி இலாகாவில் ஸ்ரீ அவினாசிலிங்கம் அவர்கள் செய்த சீர்திருத்தங்களில் பல மிகவும் அவசியமானவை. அவற்றை நன்கு நிறைவேற்ற முயல வேண்டும். அநுபவத்தை யொட்டி அவற்றில் மாற்ற வேண்டியவைகளை மாற்ற வேண்டும். ஆயிரக்கணக்கான ஆசிரியர்களின் குறைகளைக் கேட்டுச் சமாளித்து அவர்களுடைய உற்சாகமான ஒத்துழைப்பைப் பெற வேண்டும். லட்சக் கணக்கான மாணாக்கர்களையும் சரிக்கட்டிக்கொண்டு போக வேண்டும். பெற்றோர்களின் குறைகளையும் ஒரு காதால் கேட்டு வைத்துக் கொள்ள வேண்டும். கல்வி இலாகாவில் சீர்திருத்தம் செய்யாவிட்டால் "ஏன் செய்ய வில்லை?" என்பார்கள். சீர்திருத்தம் செய்தால் "ஏன் செய்தாய்?" என்பார்கள். சிலர் "சீர்திருத்தம் ரொம்ப நிதானம்" என்பார்கள். வேறு சிலர் "இவ்வளவு அவசரப்படுவது பிசகு!" என்பார்கள். இவ்வளவு கஷ்டமான கல்வி இலாகாவை நிர்வாகத் திறமையுடன் சமாளித்துக் கனம் மாதவ மேனன் வெற்றி பெறுவார் என்று நம்புகிறோம்.

---

திருப்பதிக்குச் சமீபத்தில் இரண்டு சிங்கங்களின் அட்டகாசம்!

—செய்தி

'திருப்பதி மனதே' என்று ஸ்தாபிக்க வந்திருக்கும் ஆந்திர கேசரிகளோ அவை?

★

போர்ட்டர்களின் நிலை உயர ரயில்வே இலாகா திட்டம் வகுத்து வருகிறது. —பம்பாய்ச் செய்தி

பிளாட்பாரங்களையும் சேர்த்து உயர்த்தத் திட்டம் போட்டால் நலமாயிருக்கும்.

★

பறவைக் கூண்டில் ரூ. 22,000 பெறுமானமுள்ள தங்கம், கரன்சி நோட்டுகளை எடுத்துச் சென்ற ஒரு அரேபியர் கைது செய்யப்பட்டார்.

—பம்பாய் துறைமுகம்

அது காரணமாக மேற்படி அரேபியர் கைதிக் கூண்டுக்குள் செல்லலாயிற்று.

★

உலகின் பல பாகங்களில் மே 'தினம்' கொண்டாடப்பட்டது.

—பத்திரிகைச் செய்தி

மேதினி எங்கும் மே தினம் கொண்டாடப்பட்டதில் அதிசயம் என்ன?

# திருடனுக்குத் தஞ்சம்! தீரனுக்குச் சிறை!

உலகிலே பிரிட்டன் மிகுந்த வல்லமையும் செல்வாக்கும் பெற்று விளங்கிய காலத்தில், ஆசியாவிலுள்ள எந்த நாடாவது அதை எதிர்த்து நிற்கத் துணிந்திருக்குமா? எதிர்க்கத் துணிந்தாலும் வெற்றிபெற முடிந்திருக்குமா?

இந்தக் கேள்விகளுக்குச் சரித்திரம் அளிக்கும் பதிலைச் சிறிது ஞாபகப் படுத்திக் கொள்வோம்.

நாலு வருஷ காலம் நடந்த முதலாவது உலக மகாயுத்தத்தில் பிரிட்டன் வெற்றிபெற்று 1919-ம் ஆண்டு மிகுந்த செல்வாக்குடன் விளங்கியது.

அப்போது உலக நாடுகள் ஒப்ப தன்னுடைய சுதந்திரத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்காக மிகச் சிறிய நாடான ஆப்கானிஸ்தானம் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இருந்த இந்தியாமீது திடீரென்று போர்தொடுத்தது! திடீரென்று வெற்றியும் பெற்றுத் தன்னுடைய சுதந்திரத்தை நிலைநிறுத்திக் கொண்டது!

ஒரு சிற்றாசிரியிடம் பிரிட்டிஷ் வல்லரசு அவ்வாறு அடி பணிந்ததற்குக் காரணம் என்ன?

அப்போது ஆப்கானிஸ்தானத்தை எதிர்த்து நின்றால் பிரிட்டன் நிச்சயமாக வெற்றி பெற்றிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவ்வாறு எதிர்க்க பிரிட்டன் விரும்பவில்லை.

• • •

பூமியிலே மகா பெரிய போர்கள் நிகழ்ந்த ஒரு சில இடங்களில் ஆப்கானிஸ்தானமும் ஒன்றாகும்.

அந்த நாட்டை முதலில் பாரசீகர்களிடமிருந்து மகா அலெக்ஸாண்டர் கைப்பற்றினான். அங்கு கிரேக்கர்கள் பல வருஷங்கள் வரையில் ஆட்சி புரிந்துவந்தனர். பிறகு அந்த நாட்டில் முறையே அராபியர், மங்கோலியர், இந்தியர்களின் ஆதிக்கம் ஏற்பட்டது.

கடைசியாக, 1839-ம் வருஷம் பிரிட்டிஷ் துருப்புகள் அங்கு பிரவேசித்தன. அதன் விளைவாக பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் கீழ் ஆப்கானிஸ்தானத்தில் ஒரு பொம்மை அரசு ஏற்பட்டது. பின்னர் அத்தேசத்தின் வெளிநாட்டு விவகார நிர்வாக அதிகாரத்தை பிரிட்டிஷார் தங்களுடைய ஏகபோக பாத்தியமாகச் செய்து கொண்டனர்.

மேற்படி அதிகாரத்தை மீண்டும் தங்களிடம் ஒப்புவிக்க வேண்டும் என்பதற்காகவே ஆப்கன் மன்னரான அமீர் அமானுல்லா 1919-ம் ஆண்டு இந்தியாமீது படையெடுத்தார்.

அவ்வமயம் பாஞ்சாலத்தில் பிரிட்டிஷாரின் கொடிய அடக்குமுறை காரணமாக இந்தியா முழுதும் கொதித்துக் கொண்டிருந்தது. கிலாபத் பிரச்னையும் உச்ச நிலையில் இருந்தது.

எனவே, அமானுல்லா மூட்டும் தீ எதில் வந்து முடியுமோ என்று பிரிட்டிஷார் பீதி யடைந்தனர். போரை விரும்பாத பரம சாதுக்களைப் போல, ஆப்கன் வெளிநாட்டு நிர்வாகத்தை ஆப்கன் சர்க்காரிடமே ஒப்புவித்து அவர்களுடன் சமரசத்தை நாடினர்!

அமீர் அமானுல்லா அவ்வாறாக வெற்றி பெற்றார். ஆப்கானிஸ்தானம் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் கடுகளவும் இல்லாத பூரண சுயேச்சை நாடாகியது. அதன் பலனாக அமானுல்லாவின் கீர்த்தி உலகம் முழுதும் பரவியது.

எனினும், பிரிட்டிஷார் தங்களுடைய ஆத்திரத்தை வெளிக் காட்டவில்லை. அமானுல்லா மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள எப்போது சமயம் வாய்க்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

அமீர் அமானுல்லா தமது மனைவியுடன் வெளிநாடுகளுக்கு யாத்திரை சென்றிருந்தார். அதுதான் சமயம் என்று பிரிட்டிஷ் ஏஜெண்டுகள் ஆப்கானிஸ்தானத்துக்குச் சென்றனர். ஏராளமான தொகை செலவழித்து துஷ்பிரசாரம் செய்தனர்.

அமானுல்லா திரும்பி வந்ததும் அந்த நாட்டில் பெரும் கலகம் மூண்டது. எனவே, அவர் தமது மனைவியுடன் வெளிநாட்டுக்குச் சென்று அடைக்கலம் புகுந்தார்.

அவ்வாறாக ஆங்கிலேயரிடமிருந்து அதிகாரத்தைக் கைப்பற்றிய அமானுல்லா, அவர்களுடைய தந்திரத்

திறல் அரசையே இழந்து அன்னியர்களிடம் அடைக்கலம் புக நேரிட்டது!

* * *

பிரிட்டிஷாரிடம் தங்களுடைய சுதந்திரத்தைப் பறிகொடுக்கக் கூடாது என்பதற்காக வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தைச் சேர்ந்த மலைவாசிகளான பட்டாணியர்கள் நடத்தி வந்துள்ள யுத்தமும் சரித்திரப் பிரசித்தி பெற்றது.

பல பல வருஷங்களாகப் போராடிப் பாதுகாத்து வந்துள்ள சுதந்திரத்தை, ஆங்கிலேய கவர்னர்கள், சிட்னி காட்டன் போன்ற ஆகாசத் திருடர்கள் முதலியோரின் உதவியை நாடும் பாகிஸ்தான் அபகரிப்பதைப் பட்டாணியர்கள் எவ்வாறு சகித்துக் கொண்டிருக்க முடியும்?

மலை வாசிகளின் சுதந்திரத்தில் தலையிடும் பாகிஸ்தான் மீது ஆப்கானியர்கள் ஆத்திரம் கொண்டுள்ளனர் என்றும், அவ்விஷயமாக பாகிஸ்தானுக்கு விட்டுக் கொடுப்பதால் ஆப்கானிஸ்தானத்தில் பெரும் புரட்சி ஏற்படும் என்றும் ஆப்கன் பத்திரிகைகளும் ரேடியோவும் அடிக்கடி கூறி வருகின்றன.

எல்லைப்புற மலைவாசிகள் விஷயத்தில் நூறு வருஷங்களுக்கு மேலாக பிரிட்டிஷார் தங்களுடைய கைவரிசையையெல்லாம் காட்டினர்.

இறுதிவரையில், அதாவது இந்தியாவிலிருந்து வெளியேறும் வரையில் அவர்களால் வெற்றி பெற முடியவில்லை.

ஆயுதபலமும் தந்திரபலமும் அபரிமிதமாக வாய்க்கப்பெற்ற பிரிட்டிஷார் செய்ய முடியாத காரியத்தை, அவர்களுடைய தயவால் சிருஷ்டிக்கப்பட்ட பாகிஸ்தான் செய்ய முற்படுவது கேலிக்கூத்து என்று மலைவாசிகளும், பட்டாணியர்களின் க்ஷேமத்தில் பாகிஸ்தானைக் காட்டிலும் அதிக சிரத்தையுள்ள ஆப்கானியர்களும் இடித்துக் கூறுவது இயற்கையே.

* * *

ஆப்கானியர்களின் அதிருப்தியையும் பட்டாணியர்களின் பேராத்திரத்தையும் சம்பாதித்துக் கொண்டுள்ள பாகிஸ்தானியர்கள், தங்களுடைய கஷ்டங்களுக்கெல்லாம் காரணம் இந்தியாதான் என்று அடிக்கடி பிரசாரம் செய்வது எவ்வளவு பெரிய மோசடி என்பதைச் சமீபத்தில் இந்தியாவின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் விளக்கிக் கூறினர்.

“பாகிஸ்தானைச் சேர்ந்த சுவாட் முதலிய சமஸ்தானங்களில் ஜனங்கள் எவ்வளவு கொடிய அடக்குமுறைகளுக்கு உள்ளாகியிருக்கிறார்கள் என்பதைப் பாகிஸ்தான் பத்திரிகைகளே பத்தி பத்தியாகக் கண்டிக்கின்றன.

“இந்தியாவின் பிரதம மந்திரி என்ற முறையில் நான் பாகிஸ்தானுக்கு விரோதமாக எதுவும் கூற விரும்பவில்லை.

“எனினும், கான் அப்துல் கபார்கானை அவர்கள் சிறைப்படுத்தியது என் ஹிருதயத்தில் முள்ளைப்போல் தைத்திருக்கிறது. இந்தியாவின் விடுதலைக்காக வீரப் போர் புரிந்த இந்த மாபெரும் தலைவர், இந்தியா விடுதலை பெற்றபின் சிறையில் கிடந்து உழலுவது மகா துக்ககரமான விஷயமாகும். இச்சம்பவமும், காஷ்மீரத்தில் மலைவாசிகள் படையெடுத்துச் சூறையாட வடமேற்கு எல்லைப்புற மாகாணப் பிரதம மந்திரி புரிந்த தீவிர உதவியும் பாகிஸ்தான் சர்க்காரின் போக்கை அம்பலப்படுத்தியிருக்கின்றன.

“தன் சொந்த ஜனங்களையே இப்படி அடக்கி ஆள்வோர், காஷ்மீர ஜனங்களுக்கா சுதந்திரம் கொடுக்கப் போகிறார்கள்? காஷ்மீரில் எந்த இடத்தில் பாகிஸ்தானின் ஆதிக்கம் ஏற்படுகிறதோ அந்த இடம் அழிந்துவிடும் என்பதையும் அங்குள்ள ஜனங்கள் அதோகதியாகி விடுவார்கள் என்பதையும் இந்தியாவிலோ காஷ்மீரத்திலோ அறியாதவர் ஒருவராவது இருக்க முடியுமா?” என்று பண்டித ஜவாஹர்லால் நேரு மனம் உருகிப் பேசினர்.

அன்பிலும் அஹிம்சையிலும் சத்திய வழியிலும் நிலைத்த கான் அப்துல் கபார்கான் சகோதரர்களின் சுதந்திரத்தை அபகரித்து, அந்த உத்தமர்களைச் சிறைப்படுத்தியுள்ள பாகிஸ்தான் சர்க்காரைப் பட்டாணியர் வெறுப்பதிலும், அதன் காரணமாக ஆப்கன்—பாகிஸ்தான் தகராறு நாளுக்கு நாள் முற்றி வருவதிலும் ஆச்சரியம் என்ன இருக்கிறது?

சிட்னி காட்டனைப் போன்ற கொடிய திருடனுக்குத் தஞ்சம் அளிப்பதும், கான் அப்துல் கபார்கானைப் போன்ற வீர தீரரைச் சிறையில் தள்ளுவதும் எவ்வளவு அக்கிரமம்!

# நீதிச் சபையின் அநீதி!

கவர்னர் வருவார், கவர்னர் போவார். மந்திரி சபை வரும், மந்திரி சபை போகும். யார் வந்தாலும் யார் போனாலும் பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களிலுள்ள பிரஞ்சு சர்க்கார் ஆட்சியை மாத்திரம் யாராலும் அசைக்க முடியாது என்று பிரஞ்சு சர்க்கார் கருதுவதாகத் தோன்றுகிறது. உண்மையிலேயே அவர்கள் அவ்வாறு கருதுகிறார்களோ, என்னவோ? அது எப்படியாயினும் அவர்கள் செய்யும் காரியங்கள், இந்தியப் பிரதேசங்களில் பிரஞ்சு ஆட்சியை ஸ்தாபிக்க அவர்கள் உறுதி கொண்டிருக்கிறார்கள் என்பதையே காட்டுகின்றன.

பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களில் கடுமையான அடக்கு முறைகளைக் கைக்கொண்ட கவர்னர் பாரன் பிரான்சுக்குச் சென்றார். "நான் திரும்பவும் இந்தியாவுக்கு வந்துதான் தீருவேன்!" என்று பயமுறுத்தினார். ஆனால், அவர் திரும்பி வரவேயில்லை. அவருடைய ஸ்தானத்தில் வேறு ஒருவர் பிரான்ஸிலிருந்து வந்திருக்கிறார்.

அடக்கு முறைகளுக்கும் தேர்தல் அலங்கோலங்களுக்கும் தலைமை தாங்கின்ற பாரன் போய், வேறு ஒருவர் வந்திருப்பதன் மூலம் பிரான்ஸின் கொள்கையில் திருப்திகரமான மாறுதல் ஏற்பட்டிருக்குமோ என்று பலர் நினைக்கலாம்.

பிரான்சுக்குத் திரும்பிச் சென்ற பாரனுக்குத் தாம் எவ்விதத்திலும் சளைக்கப் போவதில்லை என்பதைப் பிரான்ஸிலிருந்து வந்துள்ள சாம்பான் தாமதமின்றி வெளிப்படுத்தி விட்டார்!

மாஹி ஜனங்களைப் பயமுறுத்துவதற்காக முன்பு பாரன் அங்கு கடற்கரையருகே ஒரு யுத்தக் கப்பலைக் கொண்டு வந்து நிறுத்தினார். இப்போது காரைக்கால் ஜனங்களைப் பயமுறுத்துவதற்காக சாம்பான் ஓர் யுத்தக் கப்பலைத் தருவித்திருக்கிறார்!

முன்பு பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களில் நடந்த தேர்தல்கள் அலங்கோலமாக முடிவதற்கு பாரன் உதவி புரிந்தார். இப்போது சர்வஜன வாக்கு எடுப்பு சர்வமோசமாவதற்கான முறைகளை சாம்பான் கைக்கொண்டு வருகிறார்.

இந்த லட்சணத்தில பிரஞ்சு சர்க்கார் சர்வதேசக் கோர்ட்டிலிருந்து மேற்படி பிரதேசங்களுக்குப் பார்வையாளர்களை அழைத்திருக்கின்றனர். அவ்விஷயமாக பிரஞ்சு சர்க்கார் இந்திய சர்க்காரைக் கலந்து ஆலோசிக்காதது ஆச்சரியமாக இருக்கிறது. இந்திய சர்க்காரின் சம்மதத்தைப் பெறுமலும் இந்திய சர்க்காருக்கு எவ்விதத் தகவலும் அறிவிக்காமலும் சர்வதேசக் கோர்ட்டார் பிரான்ஸின் அழைப்பை ஏற்றுக் கொண்டது அதைவிட ஆச்சரியமாக இருக்கிறது.

தனி நபர்கள் விஷயத்தில் சாதாரணக் கோர்ட்டுகள் கூடச் செய்யத் துணியாத ஓர் அநீதியை, உலகத்தின் நன்மதிப்பைப் பெற்ற மாபெரும் இந்திய சர்க்கார் விஷயத்தில் சர்வ தேசக் கோர்ட் செய்யத் துணிந்திருக்கிறது. அத்துடன் நில்லாமல் மேற்படி செய்கை நியாயமானது என்றும் வாதிக்கிறது. அதாவது பாரபட்சமின்றி நடந்து கொள்ள வேண்டிய சர்வதேசக் கோர்ட்டார், தங்களுடைய உயர்வையும் அந்தஸ்தையும் நீதி நெறியையும் மறந்து பிரான்சுக்கு வக்காலத்து வாங்கும் வக்கீல் ஸ்தானத்தை ஏற்றுக் கொண்டிருக்கின்றனர்!

இவ்வாறாக, ஏற்கெனவே செய்து கொண்டுள்ள ஒப்பந்தத்துக்கு நேர் விரோதமாகக் காரியங்களைச் செய்து வரும் பிரஞ்சு சர்க்கார், பல சில்லறை விஷமங்களிலும் ஈடுபட்டு வருகிறார்கள். இந்த மாதம் பத்தொன்பதாம் தேதி சந்திரநாகூரில் சர்வஜன வாக்கு எடுக்க வேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது அல்லவா? அந்தத் தேதியை ஒத்திப்போடப் பிரஞ்சு சர்க்கார் சூழ்ச்சி செய்து வருகிறார்கள்.

சந்திரநாகூர் இந்தியாவுடன் ஐக்கியமடைய வேண்டும் என்று மேற்படி நகர முனிசிபல் சபை ஏற்கெனவே ஏகோபித்து முடிவு செய்திருக்கிறது. அவ்விஷயமாகச் சந்திரநாகூர் ஜனங்களிடையே வேற்றுமை எதுவுமில்லை. எனவே, சர்வஜன வாக்கு எடுக்கும் தேதியை ஒத்தி வைத்தால், அதற்குள் அங்கு ஏதாவது பிரித்தாளும் முறைகளைக் கைக் கொள்ளலாம் என்பது பிரஞ்சு சர்க்காரின் எண்ணம். பிரித்தாளும் முறையில் கை தேர்ந்த பிரிட்டிஷாரின் சூழ்ச்சிகள் இந்தியாவின் சுதந்திரத்தைத் தடுக்க முடியவில்லை. அப்படியிருக்க அம்முறையில் அதிகத் தேர்ச்சியற்ற பிரஞ்சு சர்க்கார் பிரஞ்சு இந்தியப் பிரதேசங்களின் சுதந்திரத்தைத் தடுத்துவிட முடியுமா?

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி

## 9. தொழிலாளர் தோழன்

இந்தியாவில் இப்போதெல்லாம் தொழிலாளர் இயக்கம் பிரமாதப் படுகிறது. பல தொழிலாளர் சங்கங்களும் தொழிலாளர் காங்கிரஸ்களும் போட்டி யிட்டுக் கொண்டு தொழிலாளருக்குத் தொண்டு செய்து வருகின்றன. தேச நலனைக் கவனியாது சிலர் தொழிலாளரைத் தூண்டிவிட்டு வேலை நிறுத்தம் செய்யப் பண்ணுவதிலேயே கண்ணும் கருத்துமா யிருக்கின்றனர். அரசியல் செல்வாக்குப் பெறுவதற்காகவே பலர் தொழிலாளர் இயக்கங்களில் சேருகிறார்கள்.

முதன் முதலாக இந்தியாவில் தொழிலாளர் இயக்கத்துக்கு உயிர் கொடுத்துப் பலப்படுத்தியவர் காந்தி மகாத்மாவே யாவர். இந்தியாவில் முதலாவது பெரிய தொழிலாளர் வேலை நிறுத்தம் மகாத்மாவின் தலைமையிலேயே நடந்தது. அந்த இயக்கம் பூரண அஹிம்சா தர்ம முறையில் நடந்து மகத்தான வெற்றியும் அடைந்தது. அதன் காரணமாக இந்தியா தேசம் முழுவதிலும் தொழிலாளரின் நிலை ஓரளவு உயர்ந்தது என்று சொல்லுவது மிகையாகாது. அந்த வேலை நிறுத்தத்தின் விவரம் பின்வருமாறு:-

சம்பாரணில் குடியானவர்களின் நிலைமையைப் பற்றி விசாரணை இன்னும் நடந்து கொண்டிருக்கும் போதே ஆமதாபாத்திலிருந்து மகாத்மாவுக்கு ஒரு கடிதம் வந்தது. அதை எழுதியவர் ஸ்ரீமதி அனசூயா பென். ஆமதாபாத்தில் ஆலைகள் அதிகம். அவற்றில் வேலை செய்த தொழிலாளரும் அதிகம். அவர்கள் பெற்று வந்த சம்பளமோ ரொம்பக் குறைவு. சில காலமாக ஆலைத் தொழிலாளர் சம்பள உயர்வு கோரக் கிளர்ச்சி செய்து வந்தார்கள். ஸ்ரீமதி அனசூயா பென் என்னும் பெண்மணி அத்தொழிலாளர்களுக்கு உதவி செய்து வந்தார். பல நாள் கிளர்ச்சி நடந்தும் பலன் ஒன்றும் கிட்ட வில்லை. அதன்பேரில் ஸ்ரீமதி அனசூயா பென் மகாத்மாவுக்குக் கடிதம் எழுதினார். அதில் ஆமதாபாத் தொழிலாளருக்கு வழிகாட்டி உதவ வேண்டும் என்று கேட்டிருந்தார். மகாத்மா சம்பாரண் வேலை முடிந்ததும் ஆமதாபாத்துக்கு வருவதாகப் பதில் எழுதினார்.

அவ்வாறே சம்பாரணில் திருப்திகரமான முடிவு ஏற்பட்டதும் மகாத்மா ஆமதாபாத் சென்றார். தொழிலாளரின் நிலைமையை விசாரித்து அறிந்த பிறகு அவர்களுடைய கட்சியில் நியாயம் இருப்பதாகக் கண்டார். எனினும் தொழிலாளரின் போராட்டத்துக்கு அவர் தலைமை வகித்து நடத்துவதில் ஒரு தர்ம சங்கடம் இருந்தது. அதுவரை ஆமதாபாத் ஆலை முதலாளிகள் பலர் மகாத்மா சத்தியாக்கிரஹ ஆசிரமம் ஸ்தாபிப்பதற்கு உதவி புரிந்து வந்தார்கள். ஆலை முதலாளிகளுக்குத் தலைவர் ஸ்ரீ அம்பாலால் சாராபாய். தொழிலாளர் கட்சிக்குத் தலைமை வகித்த ஸ்ரீமதி அனசூயாபென் ஸ்ரீ அம்பாலாலின் சகோதரி. ஆகவே போராட்டம் ஏற்பட்டால் எல்லாருக்குமே மனச் சங்கடம் உண்டாகும். இதை யெல்லாம் உத்தேசித்து மகாத்மா ஆலை முதலாளிகளிடம் சென்று, விவாதத்தை மத்தியஸ்தர்களின் தீர்ப்புக்கு விட்டுவிடும்படி கேட்டுக் கொண்டார். முதலாளிகள் இந்த யோசனையை வன்மையாக மறுத்து விட்டார்கள். "எங்களுக்கும் எங்கள் தொழிலாளிகளுக்கும் இடையே மூன்றாவது மனிதர் வந்து மத்தியஸ்தம் செய்வதா? அதற்கு நாங்கள் இணங்கவே முடியாது!" என்று சொல்லிவிட்டார்கள்.

காந்திஜிக்கு வேறு வழி யில்லாமற் போயிற்று. ஆலைத் தொழிலாளருக்கு வேலை நிறுத்தம் செய்யும்படி யோசனை சொல்ல நேர்ந்தது. ஆனால் அவ்விதம் அவர்களுக்கு யோசனை கூறியபோது மகாத்மா நாலு நிபந்தனைகளையும் குறிப்பிட்டார். "இந்த நிபந்தனைகளை நிறைவேற்றுவதா யிருந்தால்

நான் உங்களுக்குத் தலைமை வகிக்கிறேன். இல்லாவிட்டால் நான் பொறுப்பு ஏற்றுக் கொள்ள முடியாது" என்று கூறினார். அந்த நாலு நிபந்தனைகளும் வருமாறு:—

(1) எந்த நிலைமையிலும் தொழிலாளர் பலாத்காரத்தைக் கைக்கொள்ளக் கூடாது.

(2) கட்டுப்பாட்டை மீறி எந்தத் தொழிலாளராவது வேலைக்குப் போனால் அவர்களை மற்றவர்கள் நிர்ப்பந்திக்கக் கூடாது.

(3) வேலைநிறுத்தத்தின்போது வாழ்க்கை நடத்துவதற்குப் பிச்சை எடுக்கக் கூடாது.

(4) வேலைநிறுத்தம் எவ்வளவு காலம் நீடித்தாலும் உறுதியாக நிற்கவேண்டும்; வேறு தொழில் செய்து பிழைக்கவேண்டும்.

மேற்படி நாலு நிபந்தனைகளையும் தொழிலாளர் தலைவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். தொழிலாளர்களின் பொதுக் கூட்டம் கூட்டி அதில் மகாத்மாவின் நிபந்தனைகளை அவர்களுக்குத் தெளிவாகத் தெரியப்படுத்தினார்கள். எல்லாவற்றையும் நன்றாகக் கேட்டுக்கொண்ட பின்னர் தொழிலாளர்கள் ஒரு முகமாக வேலைநிறுத்தம் செய்யத் தீர்மானித்தார்கள். முதலாளிகள், ஒன்று தங்கள் கோரிக்கைகளை ஒப்புக்கொள்ள வேண்டும் அல்லது மத்தியஸ்தத்துக்கு விடச் சம்மதிக்க வேண்டும் என்றும் அதுவரையில் வேலைக்கு யாரும் திரும்பிப் போவதில்லையென்றும் சபதம் செய்தார்கள்.

இந்த வேலை நிறுத்தம் நடந்தபோதுதான் மகாத்மாவுக்கு முதன் முதலாக ஸ்ரீ சங்கர்லால் பாங்கர், ஸ்ரீ வி ஜே. படேல், ஸ்ரீ வல்லபாய் படேல் முதலிய குஜராத்தி தலைவர்கள் அறிமுகமானார்கள்.

வேலைநிறுத்தம் ஆரம்பமான பிறகு தினந்தோறும் சபர்மதி நதிக்கரையில் தொழிலாளர் கூட்டம் நடந்து வந்தது. ஆயிரக்கணக்கில் தொழிலாளிகள் கூட்டத்துக்கு வந்தார்கள். மகாத்மா ஒவ்வொரு நாளும் பேசினார். அவர்களுடைய சபதத்தையும் தம்முடைய நாலு நிபந்தனைகளையும் ஞாபகப்படுத்தினார்.

தொழிலாளிகள் தினந்தோறும் ஆமதாபாத் நகரத்தின் வீதிகளில் அமைதியாக ஊர்வலம் நடத்தினார்கள்.

"தோழர்களே! சபதத்தைக் காப்பாற்றுங்கள்!" என்று எழுதிய துணிக் கொடிகளைப் பிடித்துக் கொண்டு சென்றார்கள்.

மகாத்மா அடிக்கடி ஆலை முதலாளிகளைப் போய்ப் பார்த்து வந்தார். தொழிலாளிகளுக்கு நீதி வழங்குமாறு வேண்டிக் கொண்டார். அதில் பயன் விளையவில்லை. "நாங்களும் சபதம் எடுத்துக் கொண்டிருக்கிறோம். எங்கள் சபதத்தை நாங்கள் மீற முடியாது. தொழிலாளிகள் எங்கள் குழந்தைகளைப் போன்றவர்கள். அவர்களுக்கும் எங்களுக்கும் மத்தியில் மூன்றாம் மனிதர்கள் வந்து குறுக்கிடுவதை எப்படி நாங்கள் பொறுக்க முடியும்?" என்றார்கள் முதலாளிகள்.

வேலைநிறுத்தம் மொத்தம் மூன்று வார காலம் நடந்தது. முதல் இரண்டு வாரம் வரையில் ஆலைத்தொழிலாளிகள் தைரியமாகவும் உறுதியாகவும் இருந்தார்கள். அதற்குப் பிறகு சிலர் தளர்ச்சி அடைய ஆரம்பித்தார்கள். சபதத்தை மீறி வேலைக்குச் செல்வோரைப் பார்த்து மற்றப் பெரும்பான்மையோர் கோபம் கொள்ள ஆரம்பித்தார்கள். ஒன்று அவர்கள் பலாத்காரத்தில் இறங்கி விடலாம் அல்லது தாங்களும் சோர்வு அடைந்து வேலைக்குத் திரும்பி விடலாம் என்று காணப்பட்டது. பொதுக்கூட்டத்துக்கு வந்த தொழிலாளிகளின் முகத்தில் சோர்வும் கிலேசமும் குடி கொண்டிருந்தன. இதையெல்லாம் பார்த்த மகாத்மாவின் மனதில் கவலை உண்டாயிற்று. தொழிலாளர் வேலைநிறுத்தம் தோல்வியடைந்து விடுமே என்பதைப் பற்றிய கவலையைக் காட்டிலும் அவர்கள் தினந்தோறும் செய்து வந்த பிரதிக்ஞையைக் கைவிட்டு விடலாம் என்ற எண்ணம் காந்திஜிக்கு அதிக மன வேதனையை அளித்தது. இந்த நிலைமையில் என்ன செய்வது என்ற சிந்தனை அவர் உள்ளத்தில் ஓயாமல் இருந்து கொண்டிருந்தது. ஒரு நாள் பொதுக் கூட்டத்தில் மகாத்மா பேசிக்கொண்டிருக்கையில் பளிச்சென்று ஓர் ஒளி உதயமாயிற்று. தாம் செய்ய வேண்டியது இன்னதென்று தெரிந்தது. உடனே அந்த க்ஷணத்திலேயே, மகாத்மா அதைத் தொழிலாளரிடம் வெளியிட்டார்:-"நீங்கள் உங்களுடைய கோரிக்கைகள் நிறைவேறும் வரையில் வேலைக்குத் திரும்புவதில்லையென்று திரும்பத் திரும்பப் பிரதிக்ஞை செய்திருக்கிறீர்கள். ஆனால் இப்போது உங்களில் சிலர் உறுதி குலைந்து வேலைக்குத் திரும்புவதைப் பார்க்கிறேன். இந்த மாதிரி சத்தியப் பிரதிக்ஞை செய்துவிட்டு அதை மீறுவதைப் பார்க்க எனக்குச் சகிக்கவில்லை. ஆகையால் இந்த வேலை நிறுத்தம் முடியும் வரையில் நான் உண்ணாவிரதம் இருக்கத் தீர்மானித்து விட்டேன்!" என்றார்.

தொழிலாளர் அனைவரும் திடுக்கிட்டுப் போயினர். தங்களுக்காக மகாத்மா பட்டினி விரதம் இருக்கப் போகிறார் என்பதைக் கேட்டு அவர்களுடைய உள்ளம் உருகியது. "வேண்டாம்; வேண்டாம். நீங்கள் உப

வாசம் இருக்கக் கூடாது. எங்களுடைய தவறுக்காக நாங்கள் உண்ணாவிரதம் இருக்கிறோம். எங்களுடைய பிரதிக்ஞையை நாங்கள் ஒரு நாளும் மீற மாட்டோம். உயிர் போனாலும் சபதத்தைக் காப்பாற்றுவோம். நீங்கள் பட்டினி கிடக்கக் கூடாது" என்று தொழிலாளர்கள் கதறினார்கள்.

"என்னுடைய உபவாசத்தைப் பற்றி நீங்கள் கவலைப்பட்டுப் பயனில்லை. வேலை நிறுத்தம் முடிந்த பிறகுதான் நான் இனி உணவு அருந்தப் போகிறேன். ஆனால் நீங்கள் உங்கள் பிரதிக்ஞையைக் காப்பாற்றுவதானாலும் வெறுமனே சோம்பி யிருப்பதில் பயனில்லை. பொது ஜனங்களிடம் சென்று பிச்சை எடுத்தலும் கூடாது. அவரவர்களும் ஏதாவது வேலை தேடிக்கொள்ள வேண்டும். உயிர் வாழ்வதற்கு வேண்டிய ஊதியம் கிடைத்தாலும் போதும் என்று கிடைத்த வேலையைச் செய்ய வேண்டும். அப்போதுதான் உங்கள் சபதத்தை நிறைவேற்ற முடியும்!" என்றார் மகாத்மா.

மகாத்மாவின் இந்த மகத்தான முடிவு தெரிந்த பிறகு தொழிலாளிகள் யாரும் வேலைக்குத் திரும்பவில்லை. அவரவர்களும் வேறு வேலை பார்த்துக் கொள்ளத் தொடங்கினார்கள். ஸ்ரீ வல்லபாய் படேல் வேலை நிறுத்தம் செய்தவர்களில் சிலருக்கு ஆமதாபாத் நகரசபையின் கீழ் வேலை தேடிக் கொடுத்தார். சபர்மதி ஆசிரமத்தில் கைத்தறி நெசவுப் பள்ளிக்கூடம் ஒன்று அப்போதுதான் ஸ்தாபிக்கப்பட்டது. இந்தப் பள்ளிக்கூடத்தின் அடித்தளத்தை நிரப்ப ஏராளமான மணல் வேண்டியிருந்தது. இந்த வேலைக்குத் தொழிலாளரில் பலரை உபயோகிக்கலாம் என்று ஸ்ரீ மகன்லால் காந்தி சொன்னார். ஸ்ரீமதி அனசூயா பென் முதலில் வழி காட்டினார். கூடையில் மணலை வாரித் தம் தலைமேல் வைத்துக் கொண்டு போய்க் கொட்டினார். அவரைப் பின்பற்றி ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் மணல் கூடை தூக்கிச் சென்றார்கள்.

இப்படியெல்லாம் எத்தனை நாளைக்கு நடக்க முடியும்? நிலைமை நெருக்கடியாகத்தான் தோன்றியது. ஆனால் காந்தி மகாத்மாவின் உண்ணாவிரதம் ஆமதாபாத் ஆலை முதலாளிகளின் மனதை இதற்குள் கலக்கப்பண்ணி யிருந்தது. அவர்கள் கூடி ஆலோசித்தார்கள். அவர்களுடைய பிரதிநிதிகள் மகாத்மாவிடம் வந்து தங்கள் புகாரைத் தெரிவித்தார்கள். "தாங்கள் உண்ணாவிரதம் இருப்பது நியாயமல்ல. தங்களிடம் நாங்கள் மதிப்பும் அபிமானமும் உள்ளவர்கள். இப்படித் தாங்கள் பட்டினி கிடப்பதால் எங்களைத் தர்ம சங்கடமான நிலையில் கொண்டு வைத்துவிட்டீர்கள். இது தங்களுக்கு அழகல்ல" என்று முதலாளிகளின் பிரதிநிதிகள் கடிந்துகொண்டார்கள்.

இதற்கு மகாத்மா, "என்னுடைய உண்ணாவிரதத்துக்காக நீங்கள் உங்கள் உறுதியை மாற்றிக்கொள்ள வேண்டியதில்லை. உங்களை உத்தேசித்து நான் உபவாசம் இருக்கவில்லை. தொழிலாளிகள் பிரதிக்ஞை தவறுவதைத் தடுக்கவே உண்ணாவிரதம் இருக்கிறேன்" என்று சொன்னார். இந்தச் சமாதானத்தை அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை.

ஆலை முதலாளிகளின் தலைவர் ஸ்ரீ அம்பாலால் ஸாராபாய் என்று பார்த்தோம் அல்லவா? அவரும் அவருடைய மனைவி ஸரளா தேவியும் மகாத்மாவிடம் மிக்க அன்பு வைத்திருந்தார்கள். மகாத்மா காந்தி பட்டினி இருப்பது அவர்களுக்கு மிக்க மன வேதனையை அளித்தது.

மூன்று தினங்கள் மகாத்மாவின் உண்ணாவிரதம் நீடித்திருந்தது. இதற்குள் ஆலை முதலாளிகளின் மனம் இளகி விட்டது. ஏதாவது சமரச முடிவு காண்பதில் எல்லாரும் சிரத்தை கொண்டார்கள். ஸ்ரீமதி அனசூயா பென் வீட்டில் சமரசப் பேச்சுகள் நடந்தன. முதலாளி—தொழிலாளி தகராறைப் பற்றி விசாரித்து முடிவு கூறுவதற்கு ஸ்ரீ ஆனந்த சங்கர துருவா என்பவர் மத்தியஸ்தராக நியமிக்கப்பட்டார். இருபத்தோரு நாள் நடந்த ஆலைத் தொழிலாளர் வேலை நிறுத்தம் முடிவு பெற்றது. காந்திஜியின் உண்ணாவிரதமும் முடிவடைந்தது.

இந்த மாதிரி சந்தோஷமான சமரச முடிவு ஏற்பட்டதைக் கொண்டாடுவதற்காகத் தொழிலாளரின் கூட்டம் ஒன்று நடந்தது. அந்தக் கூட்டத்துக்கு ஆலை முதலாளிகளும் ஐரோப்பியக் கமிஷனரும் வந்திருந்தார்கள். கமிஷனர் துரை அக்கூட்டத்தில் பேசினார். இவ்வளவு பெரிய வேலை நிறுத்தம் கொஞ்சங்கூடக் கலவரம் இன்றி இருபத்தோரு நாள் நடந்து முடிந்ததில் அவருக்கு மிக்க மகிழ்ச்சி ஏற்பட்டிருந்தது. இதற்குக் காந்திஜிதான் காரணம் என்பதை அந்த உத்தியோகஸ்தர் உணர்ந்திருந்தார். ஆகையால் அவர் தொழிலாளரைப் பார்த்து, "நீங்கள் எப்போதும் காந்திஜி சொல்லும் புத்திமதியைக் கேட்டு அதன்படியே நடக்க வேண்டும்" என்று கூறினார்.

ஆனால் இதே ஐரோப்பியக் கமிஷனர் கெய்ரா ஜில்லா விவசாயிகளைப் பார்த்து, "காந்திஜி சொல்லும் வார்த்தைகளை நீங்கள் கேட்கக் கூடாது. கேட்டால் உருப்படாமற் போவீர்கள்!" என்று எச்சரிக்கை செய்யும்படியான சந்தர்ப்பம் வெகு சீக்கிரத்திலேயே வருவதற்கிருந்தது.

# நான் இப்போது அழுவதே இடையாது!

சருமம் எரிச்சல் கொடுக்கும்போது எங்கிருந்து குஷி வரும்?



உஷ்ணம், வியர்வை காரணமாக உங்கள் குழந்தையின் மெல்லிய சருமம் அடிக்கடி வரண்டு எரிச்சல் கொடுக்கக் கூடும். அச்சமயங்களிலெல்லாம் அவனுக்கு இதமளிக்க, ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் தான் வெகுச் சிறந்தது. குழந்தையை குளிப்பாட்டிய பிறகும், உடை மாற்றும்போதும் இந்நேர்த்தியான பவுடரை உபயோகியுங்கள். அவன் சௌகரியமாயிருக்கும்பொழுது, எவ்வளவு குஷியாக இருக்கிறான் என்பதைக் கவனியுங்கள்!

குழந்தைக்குச் சிறந்தது — உங்களுக்கும் சிறந்தது




## ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்

இந்தியாவிற்கு ஏகபோக விநியோகஸ்தர்கள்:

ஜான்ஸன் & ஜான்ஸன் தயாரிப்பு • ஐ. ஸி. ஐ. (இந்தியா) லிட்.

ஸீதாலக்ஷ்மி சங்கரய்யர் இயற்றிய

# ராமன் நூல் வேலை

## புஸ்தகங்கள்

(தமிழில்)

●

இதுவரை வெளியிடாத நூதன நம்பர்கள் 9-ம் 10-ம் ஒரே புஸ்தகமாய் வெளியிடப் பட்டிருக்கிறது.

விலை அணா 10 - தபால் சார்ஜ் வேறு

இப்பொழுது மொத்தம் வெளியிடப் பட்டிருக்கும் புஸ்தகங்களாவன:

1. ஆரம்ப புஸ்தகம் 8 படங்கள் அடங்கியவை — 0—2—6
2. புஸ்தகம் நம்பர் 1: 3 வயதிலிருந்து 4 வயது வரையுள்ள பெண் குழந்தைகளின் ஜம்பர் — 0—6—0
3. நம்பர் 2: 9 வயதிலிருந்து 11 வயது வரையுள்ள பிள்ளைகளின் ஸ்வெட்டர் — 0—6—0
4. நம்பர் 3: ஒரு வயதிலிருந்து இரண்டரை வயதுவரையுள்ள குழந்தைகளின் கோட்டும், ஸாக்ஸும் — 0—6—0
5. நம்பர் 4: 9 வயதிலிருந்து 11 வயது வரையுள்ள பெண் குழந்தைகளின் ஸ்வெட்டர் — 0—6—0
6. நம்பர்கள் 5-ம் 6-ம் சேர்ந்த ஒரு புஸ்தகம்: 6 மாதம் வரையுள்ள குழந்தைகளின் ஸ்வெட்டர், குல்லா, ஸாக்ஸும் பெரிய புருஷர்களின் ஸ்வெட்டரும் — 0-10-0
7. நம்பர்கள் 7-ம் 8-ம் சேர்ந்த ஒரு புஸ்தகம்: பிறந்ததிலிருந்து 6 மாதம் வரையுள்ள குழந்தைக்கு கோட்டு, நிக்கர், ஸாக்ஸ், குல்லாவும் 6 மாத குழந்தையிலிருந்து ஒன்றரை வயது வரையுள்ள குழந்தையின் ப்ராக்கும் — 0-10-0
8. நம்பர்கள் 9-ம் 10-ம் சேர்ந்த ஒரு புஸ்தகம்: ஸ்திரீகள் ஜம்பரும் பெரிய புருஷர்களின் மூடு கழுத்து ஸ்வெட்டரும் — 0-10-0
9. நம்பர் 1: இங்கிலீஷில் ஸ்ரீ மீனாக்ஷி ஸீதாராமனால் மொழிபெயர்க்கப்பட்டது — 0—6—0

(தபால் சார்ஜ் பிரத்தியேகம்)

●

இந்த புஸ்தகங்கள் கீழ்க்கண்ட விலாசத்தில் எப்பொழுதும் கிடைக்கும்:

**Mrs. RAMABHAI RAMASUBBAN**

Secretary, 'Raman Knitting' Series

'SANKARA NILAYAM' - MANNARPURAM

TIRUCHIRAPPALLI

# ஆ! என்ன குளி!






புதுமை உணர்ச்சிக்கும் சரும ஆரோக்யத்திற்கும் மலபார் லிம்டா சோப்புதான் சிறந்தது!

சுத்தமான வேப்பெண்ணை சேர்க்கப்பட்டது!

FAS-461.

**VEGETABLE SOAP WORKS, CALICUT.**

*PROPRIETORS:* **SAIT N.P. & CO. LTD.**

*CALICUT-BOMBAY-2-MADRAS-1.*

# அலை ஓசை

கல்கி

## இருபத்தோராம் அத்தியாயம்

## கண்கண்ட தெய்வம்

சீதாவின் கண்களில் ததும்பி நின்ற கண்ணீர்த் துளிகள் உலர்ந்துபோயின. அவளுடைய மனதில் குடிகொண்டிருந்த பெரும் பாரம் இறங்கி விட்டது. கலக்கம் தீர்ந்து மனதில் தெளிவு ஏற்பட்டிருந்தது. தான் இனிக் கடைப்பிடிக்க வேண்டிய பாதை என்ன என்பதைப் பற்றி அவள் ஒரு தீர்மானமான முடிவுக்கு வந்திருந்தாள். லலிதா தன்னுடைய கூரிய சொல்லம்புகளை எய்து கொண்டிருந்த அதே சமயத்தில் சீதாவின் மனதில் அந்த உறுதியான தீர்மானம் ஏற்பட்டு விட்டது. ஆகவே சமீப காலத்தில் அவள் அறிந்திராத மனச்சாந்தியும ஏற்பட்டிருந்தது.

கைப்பெட்டியில் மாற்றி உடுத்திக் கொள்வதற்கு வேண்டிய இரண்டொரு சேலைகளை எடுத்து வைத்துக் கொண்டாள். கைவசம் இருந்த பணத்தையெல்லாம் திரட்டி எடுத்து மணிபர்ஸுக்குள் போட்டு வைத்துக் கொண்டாள். மேஜை டிராயரைத் திறந்து அதிலிருந்த கடிதங்களையெல்லாம் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டாள். அன்று தபாலில் வந்த பத்திரிகைத் துண்டை அணு அணுவாகப் போகும் வரையில் கிழித்து எறிந்தாள். பிறகு புறப்படுவதற்கு ஆயத்தமாகிக் கீழ் வீட்டில் சந்தடி அடங்கட்டும் என்று காத்துக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரம் வரையில் கீழே ஏக ரகளையாகத்தானிருந்தது. பட்டாபிராமனுடைய அதட்டல், சரஸ்வதி அம்மாளின் கோபக் குரல் — இவற்றுடன் குழந்தைகள் பட்டு, பாலுவின் அழுகைச் சத்தமும் கலந்து கேட்டது. பாவம்! அந்த அர்த்த ராத்திரிச் சந்தடியில் குழந்தைகள் விழித்தெழுந்து அம்மா மூர்ச்சையாகிக் கிடந்ததைப் பார்த்துவிட்டு அழத் தொடங்கின. சிறிது நேரத்துக்கெல்லாம் லலிதாவின் தீனக்குரல் கேட்டது. கொஞ்சம் கொஞ்சமாகச் சந்தடி அடங்கியது. விளக்குகள் அணைக்கப்பட்டன. பின்னர் அந்த வீட்டில் நிச்சப்தம் குடிகொண்டது.

மேலும் சிறிது நேரம் சீதா காத்திருந்தாள். வீட்டிலுள்ளவர்களிடம் சொல்லிக் கொள்ளாமல் போகலாமா என்ற எண்ணம் எழுந்து தொந்தரவு செய்தது. ஆனால் நேரம் ஆக ஆக அவளுடைய பொறுமை குறைந்து வந்தது. அந்த அறையின் நாலு பக்கத்துச் சுவர்களும் அவளை நோக்கி நெருங்கி

நெருங்கி வருவதாகத் தோன்றியது. இன்னும் சற்று நேரம் அறையில் இருந்தால் அந்தச் சுவர்கள் அவளை நெருங்கி வந்து நாலா புறமும் அமுக்கி மூச்சுத் திணற அடித்துக் கொன்று விடும் என்ற பீதி உண்டாயிற்று.

அந்த பீதியிலிருந்து விடுவித்துக் கொள்ளச் சீதா விரைந்து எழுந்தாள். மேஜையிலிருந்து ஒரு காகிதம் எடுத்து அதில் லலிதாவுக்கு ஒரு கடிதம் எழுதத் தொடங்கினாள். ஒரு வரி, இரண்டு வரி எழுதி எழுதிக் கிழித்துப் போட்டாள். கடிதம் எழுதுவது சாத்தியமில்லை என்று தீர்மானித்தாள். கைப்பெட்டியையும் மணிபர்ஸையும் எடுத்துக்கொண்டு விளக்கை அணைத்துவிட்டுப் புறப்பட்டாள். அடிமேல் அடி வைத்துச் சத்தமின்றி மெதுவாக நடந்து மச்சுப்படிகளில் இறங்கினாள்.

கீழ்க்கட்டுத் தாழ்வாரத்தில் நீல வர்ண மின்சார தீபம் எரிந்துகொண்டிருந்தது. அந்த மங்கிய வெளிச்சத்தில் அவளுக்கு எதிரே இருந்த சுவரில் ஒரு படம் தென்பட்டது. அந்தப் படத்தில் காந்தி மகாத்மாவின் திரு உருவம் இருந்தது. சாந்தி நிறைந்து புன்னகை தவழ்ந்த மகாத்மாவின் திருமுகமும் கருணை ததும்பிய கண்களும் காந்திஜி உண்மையிலேயே அங்கு வீற்றிருந்து அவளை ஆசீர்வதிப்பது போன்ற தெய்விக உணர்ச்சியைச் சீதாவுக்கு உண்டாக்கிற்று. அது ஒரு நல்ல சகுனம் என்றும் அவளுக்குத் தோன்றியது. "கலியுகத்திலே கண்கண்ட தெய்வம் காந்தி மகான்தான்" என்று சீதாவின் தாயார் அவளுடைய இளம் பிராயத்தில் அடிக்கடி சொல்லியிருந்தது அவளுடைய மனதில் நன்கு பதிந்து நிலைபெற்றிருந்தது.

பெட்டியைத் தரையில் வைத்துவிட்டுச் சீதா மகாத்மாவின் திருவுருவத்தின் முன்னால் நமஸ்கரித்தாள். எழுந்ததும் ஒரு நிமிஷம் கைகூப்பி நின்று, "எந்தையே! என்னை ஆசீர்வதியுங்கள். வாழ்க்கையில் நான் புதிதாக மேற்கொள்ளப்போகும் பாதையில் என்றும் உறுதி தவறாமல் நடப்பதற்கு வேண்டிய மனோபலத்தை எனக்கு அளியுங்கள்!" என்று வேண்டிக் கொண்டாள். அப்படி வேண்டிக் கொண்டதோடு மட்டும் அவளுடைய மனம் திருப்தி அடைந்து விடவில்லை. இன்னும் ஏதோ மனக்குறை இருந்தது. சிறிது நேரம் சிந்தனை செய்தாள். உடனே தன் மனக்குறையைத் தீர்க்கும் மருந்து இன்னதென்று புலப்பட்டது.

"காந்தி என்னும் கருணைத் தெய்வமே! தங்களுடைய ஆசியை நம்பியே இன்று நான் இந்த வீட்டை விட்டுத் தன்னந்தனியாக வெளிக்கிளம்புகிறேன். இனி நான் நடக்கப் போகும் பாதையில் எனக்கு எத்தகைய இன்னல்கள் நேர்ந்தாலும் எவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டாலும் தங்களுடைய மனதுக்கு உகந்திருக்க முடியாத காரியம் எதையும் செய்ய மாட்டேன். எப்படிப்பட்ட நிலைமையிலும் எந்தக் காரியத்தையும், 'இதைக் காந்தி மகாத்மா ஒப்புக்கொள்வாரா?' என்று எனக்கு நானே கேட்டு நிச்சயப்படுத்திக் கொண்டுதான் செய்வேன். இவ்விதம் தங்கள் சந்நிதியில் இதோ சத்தியம் செய்து பிரதிக்ஞை எடுத்துக் கொள்கிறேன். இந்தப் பிரதிக்ஞையை நிறைவேற்றும் சக்தியையும் தாங்கள் தான் எனக்கு அருள வேண்டும்!"

இவ்விதம் சீதா மனதிற்குள் தெளிவாகச் சிந்தித்துப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு மகாத்மாவின் படத்துக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டுத் தரையிலிருந்த பெட்டியை எடுத்துக் கொண்டு மறுபடி புறப்பட்டாள். வாசற்கதவைச் சத்தமின்றித் திறந்து கொண்டு வெளியேறினாள். வெளியேறும்போது அவளுடைய மனம், "இந்த வீட்டில் நான் புகுவதற்கு முன்னால் அன்பும் சாந்தமும் நிலவின. என்னால் விளைந்த குழப்பம் என்னோடு போகட்டும். இனி முன்போலவே அமைதி நிலவட்டும். இந்த வீட்டில் உள்ளவர்கள் ஒவ்வொருவரும் என் பேரில் எவ்வளவோ பிரியமாயிருந்தார்கள். அதற்கெல்லாம் பதிலாக நான் பெரும் அபசாரம் செய்துவிட்டேன். கடவுள் என்னை மன்னிப்பாராக!" என்று எண்ணமிட்டது.

பட்டாபிராமனுடைய வீட்டிலிருந்து ரயில்வேஸ்டேஷன் அரைமைல் தூரத்தில் இருந்தது. சீதா அந்தத் தேவபட்டணத்துக்கு வந்த புதிதில் வெள்ள நிவாரண வேலை செய்ததிலும் பிறகு தேர்தல் வேலை செய்ததிலும் அக்-

நகரின் தெருக்கள், சந்து பொந்துகள், மூலை முடுக்குகள் எல்லாம் அவளுக்கு நன்றாகத் தெரிந்து போயிருந்தன. ரயில்வே ஸ்டேஷனை நோக்கி நேராகச் சென்ற குறுக்குப் பாதையில் அவள் இப்போது நடந்தாள்.

வீதிகளிலும் சந்துகளிலும் ஜன நடமாட்டமே இல்லை. காலை மூன்று மணிதான் உலகமே நன்றாய்த் தூங்கும் நேரம் என்று தோன்றியது. திருடர்கள் தங்களுடைய திருவிளையாடல்களை நடத்துவதற்கு அதுவே சரியான நேரம். யாராவது தன்னை அடித்துப் பிடுங்குவதற்கு வந்து சேர்ந்தால்?... சேச்சே! அப்படியெல்லாம் எதற்காகத் தனக்கு நேரப் போகிறது?

அப்படியெல்லாம் நேராதா? ஏன் நேராது? தான் துரதிர்ஷ்டத்துக்கும் துன்பத்துக்குமே பெண் பிறந்தவள் ஆயிற்றே? யாரோ தன்னைப் பின்தொடர்ந்து வருகிறார்கள் போலிருக்கிறதே? நெருங்குவதற்குத் தயங்கிக் கொஞ்ச தூரத்திலேயே வருகிறது போல் காணப்படுகிறதே? வருகிறவர் ஒருவரா? அதிகம் பேரா? எதற்காக தன்னைத் தொடர்ந்து வரவேண்டும்! ஒருவேளை அவர்களும் தன்னைப்போல் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகலாம் அல்லவா? தான் அநாவசியமாக ஏன் பீதி கொள்ள வேண்டும்?

பீதி அநாவசியந்தான்! யார் தன்னை என்ன செய்துவிட முடியும்? ஒன்றும் முடியாதுதான்! ஆயினும் நெஞ்சம் படக், படக் என்று அடித்துக் கொள்வதில் குறைவில்லை. காலடிச் சத்தத்துக்குமேல் இதயம் அடித்துக் கொள்ளும் சத்தம் அதிகமாகக் கேட்கிறதே! கடவுளே! காந்தி மகாத்மா! இந்தப் பேதையைக் காப்பாற்றுங்கள்!

இது என்ன பைத்தியம்? யாரிடமிருந்து எதற்காகக் கடவுளும் காந்திஜியும் தன்னை இப்போது காப்பாற்ற வேண்டும்? தனக்கு என்ன பயம்? தனக்குக் கெடுதல் செய்வதில் யாருக்கு என்ன அக்கறை?

அப்படியும் நினைப்பதற்கில்லை. இந்த ஊரில் தனக்கு யாரோ விரோதிகள் இருக்கிறார்கள். இருக்கிறதினாலேதான் தன்னைப் பற்றி அப்படித் துண்டுப் பிரசுரம் போட்டார்கள். பிற்பாடு பத்திரிகையில் தன்னையும் பட்டாபிராமனையும் பற்றி அவ்வளவு கேவலமாக எழுதினார்கள். அப்படிப்பட்ட பரம விரோதிகள் என்னதான் செய்ய மாட்டார்கள்? ஒற்றர்களை வைத்திருந்து தான் தனியாக வெளிக்கிளம்புவதைக் கவனித்துப் பின்தொடர்ந்து வருகிறார்களா, என்ன? பின்தொடர்ந்து ஒருவேளை தன்னை வெட்டிப் போட்டு விடுவார்களோ, என்னமோ? அப்படிச் செய்துவிட்டால் ரொம்ப நல்லதாகப் போய்விடும்! இந்த வாழ்க்கையாகிற பாரத்தை மேலும் சுமக்க வேண்டியிராது! ஆனால் அந்தக் கிராதகர்கள் அப்படிச் செய்வார்களா? அல்லது தான் தனியாகக் கிளம்பிச் சென்றதைக் கவனித்து வைத்துக் கொண்டிருந்து இல்லாததையும் பொல்லாததையும் சேர்த்து மறுபடியும் பத்திரிகையில் ஏதாவது பயங்கரமாக எழுதுவார்களா? அப்படியெல்லாம் பத்திரிகையில் எழுதித் தன்னை அவமானப்படுத்துவதைக் காட்டிலும் ஒரு வழியாகத் தன்னைக் கொன்று போட்டுவிட்டால் நிம்மதியாகப் போய்விடும்.

ரயில்வே ஸ்டேஷனுக்கு இன்னும் பாதி தூரம் இருக்கும்போது பின்னால் யாரோ தன்னைத் தொடர்ந்து வருவதாகச் சீதா சந்தேகித்தாள். ரயில்வே ஸ்டேஷனைக் கிட்டத்தட்ட நெருங்கிய போது அவளுடைய பீதி ஒருவாறு குறைந்து தைரியம் மிகுந்தது. வருகிறது யார் என்று தெரிந்து கொள்ளும் எண்ணத்தோடு முனிசிபல் விளக்குமரம் ஒன்றின் அடியில் நின்றாள். நின்று பரபரப்புடன் தான் வந்த வழியே பார்த்துக் கொண்டிருந்தாள்.

சந்தின் திருப்பத்தில் திரும்பி ஒரு ஆசாமி வந்தான். அவன் வேறு யாரும் இல்லை. சூரியாவின் தம்பி சுண்டுதான்! சீதாவின் மனதிலிருந்து பயம் என்கிற பாரம் விலகியது. பயம் இருந்த இடத்தில் கோபம் குடி புகுந்தது. இவன் எப்படித் திடீரென்று இங்கே வந்து முளைத்தான்? தன்னை எதற்குப் பின் தொடர்ந்து வந்தான்? வந்ததுதான் வந்தானே, சட்டென்று வந்து தனக்குத் துணையாகச் சேர்ந்து கொள்ளக் கூடாதா? பின்னாலேயே வந்து தன்னை இப்படிப் பயமுறுத்து



வானேன்? அசட்டுப் பிள்ளை! கிட்டா மாமாவின் பிள்ளைகளில் சூரியா ஒருவன்தான் கொஞ்சம் சமர்த்து; மற்றவர்கள் எல்லாரும் மோசந்தான்.

அசட்டுச் சிரிப்புடன் அருகில் நெருங்கிவந்த சுண்டுவைப் பார்த்துச் சீதா, "எதற்காக அப்பா, என்னைப் பின்தொடர்ந்து வருகிறாய்? உனக்கு வேலை இல்லையா? அல்லது உன் அம்மா நான் திரும்பி வந்துவிடாதபடி ரயில் ஏற்றிவிட்டு வருவதற்கு உன்னை அனுப்பி வைத்தாளா? யாரோ திருடன் தொடர்ந்து வருகிறானாக்கும் என்று எண்ணியல்லவா பயந்து போய் விட்டேன்?" என்றாள்.

"இப்படித்தான் உலகத்தில் பல தவறுகள் ஏற்படுகின்றன. ஏதோ சூரியா எழுதியிருக்கிறானே என்பதற்காக நான் உன்னுடைய துணைக்கு வந்தேன். நீ என்னைத் திருடன் என்று எண்ணிப் பயந்து கொண்டாய்! அநாவசியமாக என் அம்மாவையும் வைகிறாய்!" என்றான் சுண்டு.

"அது போனால் போகட்டும், சுண்டு! சூரியா கடிதம் எழுதியிருக்கிறானா? எங்கிருந்து, என்ன எழுதியிருக்கிறான்?" என்று சீதா ஆவலுடன் கேட்டாள். சூரியா ஒருவனாவது தன்னுடைய நன்மையில் உண்மையான கவலை கொண்டவனாயிருக்கிறானே என்று எண்ணிச் சீதா அத்தனை துயரத்துக் கிடையில் சிறிது ஆறுதல் பெற்றாள்.

"சூரியா டில்லியிலேயிருந்து எழுதியிருந்தான். ஒருவேளை நீ கல்கத்தாவுக்குப் புறப்படலாம் என்றும் அப்படியானால் நான் சென்னை வரையிலாவது போய்க் கல்கத்தா ரயிலில் உன்னை ஏற்றி விடும்படியும் எழுதியிருந்தான். நீ விரும்பினால் கல்கத்தா வரையிலே கூடப் போகும்படி எழுதியிருந்தான். ஆனால் நீ இப்படி அர்த்த ராத்திரியில் ஒருவருக்கும் தெரியாமல் வீட்டுக் கதவைத் திறந்து போட்டு விட்டுப் புறப்படுவாய் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை ......"

"இத்தனை நாளும் நீ எங்கே இருந்தாய், சுண்டு! உன்னை நான் பார்க்கவே இல்லையே? திடீரென்று இன்றைக்கு எப்படி வந்து முளைத்தாய்?"

"உனக்கு எங்கே எலெக்‌ஷன் தடபுடலில் என்னைப் பற்றிக் கவனிக்க நேரம் கிடைக்கப் போகிறது? இத்தனை நாளும் நான் ராஜப்பேட்டையில் இருந்தேன். இந்த மார்ச்சு பரீட்சையில் தவறிவிட்டேன்; அம்மா, சூரியா இரண்டு பேரும் ஊரிலிருந்து வந்து விட்டார்கள் அல்லவா? அதற்காக என்னைப் போய் அங்கே இருக்கச் சொன்னார்கள். சூரியாவின் கடிதம் வந்ததும் புறப்பட்டு வந்தேன். அதோடு சேர்மன் தேர்தலின்போது இங்கே இருந்து அத்திம்பேர் வெற்றி பெற்றால் வாழ்த்துக் கூற விரும்பினேன். ஆனால் வாழ்த்துக் கூற அவசியமில்லாமலே போய்விட்டது. சேர்மன் வேலை ஆனதற்காக அத்திம்பேருக்கு அநுதாபந்தான் சொல்ல வேண்டும்."

"வா! ஸ்டேஷன் பக்கம் நடந்து கொண்டே பேசலாம்" என்று சொல்லிச் சீதா நடக்கத் தொடங்கினாள். ரயில்வே ஸ்டேஷன் கிட்ட இருந்தது. ரயிலோ நாலரை மணிக்குத்தான். ஆகையால் மெள்ள மெள்ளப் பேசிக் கொண்டே அவர்கள் நடந்தார்கள்.

"இராத்திரி நடந்ததெல்லாம் உனக்குத் தெரியுமா, என்ன? எங்கேயிருந்தாய் நீ?" என்று சீதா கேட்டாள். வெட்கக் கேடு முழுவதும் அவனுக்குத் தெரிந்திருக்க முடியாது என்று எண்ணினாள்.

"எதிர் வீட்டுத் தாமோதரம் பிள்ளை வீட்டில் படுத்திருந்தேன். பிள்ளையும் நானும் வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தோம். ரகளையில் பெரும் பாகம் எங்களுக்குக் கேட்டது. பிச்சத்தை இட்டு நிரப்பிக் கொண்டோம். சந்தடி ஓய்ந்து சிறிது நேரத்துக்குப் பிறகு நான் தூங்கி விட்டேன். ஆனால் பாவம், தாமோதரம் பிள்ளை தூங்கவேயில்லை. அவருக்கு ரொம்ப வருத்தம். நீ வெளிக் கிளம்புவதை அவர்தான் பார்த்துக் கொண்டிருந்து என்னை எழுப்பி விட்டார்......"

"பாவம்! தாமோதரம் பிள்ளை ரொம்ப நல்ல மனிதர். அவர் அப்போது சொன்னதைக் கேட்காமற் போனோம். அவர் சொன்னதைக் கேட்டு இந்த எலெக்‌ஷன் தொல்லையில் இறங்காமலிருந்தால் இப்படியெல்



லாம் ஏற்பட்டிராதல்லவா? என்ன தவறு செய்துவிட்டேன்!"

"அத்தங்கா! இதெல்லாம் ஒரு தவறு ஆகாது. நீ செய்த அடிப்படையான தவறு பன்னிரண்டு வருஷத்துக்கு முன் ராஜம் பேட்டையில் நடந்தது. ஏதோ அந்த சௌந்தரராகவன் நிடீரென்று சொன்னதற்காக நீ அவனைக் கலியாணம் செய்துகொண்டிருக்கக் கூடாது. நியாயமாக நீ சூரியாவைக் கலியாணம் செய்து கொண்டிருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தாயானால் இரண்டு பேரும் வாழ்க்கையில் சந்தோஷமாக இருந்திருப்பீர்கள். இப்போது நீங்கள் இரண்டு பேருமே சந்தோஷமின்றிக் கஷ்டப்படுகிறீர்கள்."

"நீ சொல்வது தப்பு, சுண்டு! நானும் சூரியாவும் கலியாணம் செய்துகொண்டிருந்தால் ஒரு நாளும் எங்கள் வாழ்க்கை சந்தோஷமா யிருந்திராது."

"ஏன் அப்படிச் சொல்கிறாய், அத்தங்கா! சூரியாவுக்கு உன் பேரில் உள்ள அபிமானம் உனக்குத் தெரியாதா, என்ன? நீ நடந்த பூமியை அவன் பூஜை செய்கிறவன் ஆயிற்றே! உன்னுடைய கஷ்டங்களை நினைத்து இரவு பகல் இப்போதுகூட உருகிக் கொண்டிருக்கிறானே? இல்லாவிட்டால் பரீட்சைக்குப் படிக்கும் எனக்குக் கடிதம் எழுதுவானா!"

"சூரியாவுக்கு என் பேரில் அபிமானம் அதிகம் என்பது எனக்குத் தெரியும், சுண்டு! ஆனால் அபிமானம் வேறு விஷயம், கல்யாணம் வேறு விஷயம். வாழ்க்கையில் அவனுடைய இலட்சியங்களுக்கும் என்னுடைய இலட்சியங்களுக்கும் ரொம்ப வித்தியாசம் உண்டு. அவனுக்கு யாருக்காவது உபகாரம் செய்து கொண்டிருந்தால் போதும்; தேசத்துக்கு ஏதேனும் தொண்டு செய்துகொண்டிருந்தால் போதும். புகழிலும் பெயரிலும் அவனுக்கு ஆசையே கிடையாது. எனக்கோ, யாராவது நாலு பேர் என்னை எதற்காவது மெச்சிக் கொண்டிருக்க வேண்டும். அப்போது தான் எனக்குச் சந்தோஷமா யிருக்கிறது. நான் இருக்கும்போது வேறு யாரையாவது பாராட்டினால் எனக்குப் பிடிப்பதில்லை. நான் பிரசங்க மேடையில் ஏறிப் பேசும்போது நாலு பேர் என்னைப் பார்த்து மலர்ந்த முகத்துடன் நின்றால், என்னுடைய பேச்சை மெச்சிக் கைதட்டினால், எனக்கு என்னமோ பட்டாபிஷேகம் பண்ணியது போலிருக்கும். சூரியாவுக்கோ இதெல்லாம் ஆசையே கிடையாது. எங்களுடைய வாழ்க்கை எப்படிச் சந்தோஷமா யிருக்க முடியும்?"

"நீ சொல்வதில் ஓரளவு உண்மையிருக்கிறது, அத்தங்கா! ஒப்புக்கொள்கிறேன். ஆனால் அப்படி உலகத்தில் ஒத்த மனத்தோடு தம்பதிகள் எங்கே அமைகிறார்கள்?"

"புது டில்லியில் ஒருத்தி இருக்கிறாள், சுண்டு! அவள் பெயர் தாரிணி. சூரியாவுக்கும் அவளுக்கும் ரொம்பப் பொருத்தம் என்று பல சமயம் நான் எண்ணியதுண்டு."

"சூரியா கூட என்னிடம் சொல்லியிருக்கிறான், அந்தத் தாரிணியைப் பற்றி! ஆனால் அவர்களுக்கு இந்த ஜன்மத்தில் கலியாணம் நடக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. இந்தியா சுதந்திரம் அடைந்தவுடனே அவர்கள் கலியாணம் செய்து கொள்ளப் போகிறார்களாம். எப்படி இருக்கிறது கதை! இந்தியாவாவது சுதந்திரம் அடையவாவது? இந்த ஜன்மத்தில் இல்லை! உன்னிடம் சொன்னால் என்ன, அத்தங்கா! இந்தச் சூரியாவுக்குக் கலியாணம் ஆகாத காரணத்தினால் என்னுடைய கல்யாணமும் தடைப்பட்டுக் கொண்டிருக்கிறது...!"

சீதாவுக்கு அவளை அறியாமல் சிரிப்பு வந்தது. "நாங்கள் எல்லாரும் கலியாணம் செய்து கொண்டு கஷ்டப்படுவது போதாதா, சுண்டு! எல்லாக் கூத்தையும் நீ பார்த்துக் கொண்டுதானே யிருக்கிறாய்?" என்றாள்.

"நீங்கள் செய்த தவறையே நானும் செய்வேனா, என்ன? முன்னால் போகிறவன் குழியில் விழுந்தால் பின்னால் வருகிறவனுக்குத் தீவர்த்தி பிடித்த மாதிரி அல்லவா? எனக்குக் கலியாணம் செய்துகொள்ளும் உத்தேசமே கிடையாது. விளையாட்டுக்காகச் சொன்னேன்!" என்றான் சுண்டு.

# இருபத்திரண்டாம் அத்தியாயம்

## டைரக்டர் சியாம சுந்தர்

எப்போதும் கலகலவென்று பற்பல குரல்களும் வித விதசத்தங்களும் கேட்டுக் கொண்டிருக்கும் ரயில்வே ஸ்டேஷன்கூட அந்த மூன்றரை மணி நேரத்தில் நிச்சப்தமாயிருந்தது. ஜனங்கள் அங்குமிங்கும் அலங்கோலமாகப் படுத்துத் தூங்கினார்கள்.

சுண்டுவும் சீதாவும் பிளாட்பாரத்துக்குள் சென்று அங்கே கிடந்த ஒரு மர பெஞ்சியில் உட்கார்ந்தார்கள்.

“வெகு நாளாக உன்னிடம் ஒரு விஷயம் சொல்லவேண்டும் என்று எனக்கு எண்ணம். அதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இப்போது சொல்லட்டுமா?” என்று சுண்டு கேட்டான்.

“பேஷாகச் சொல், கேட்கிறேன். பொழுதும் போகவேண்டும் அல்லவா?” என்றாள் சீதா.

“அத்தங்கா! ஒவ்வொருவருக்கும் இந்த உலகத்தில் பெயரும் புகழும் அடைவதற்கு என்று கடவுள் ஒரு வழியை வகுத்திருக்கிறார். அதை விட்டுவிட்டு வெளியே போனால்தான் இல்லாத கஷ்டங்கள் எல்லாம் வந்து சேருகின்றன. இங்கிலீஷில் ஒரு பழமொழி உண்டு. ‘சதுரத்தில் வட்டத்தைத் திணிக்க முயல்வதுபோல’ என்பார்கள். அது முடியாத காரியம். அதைச் செய்ய முயற்சிப்பதால் வீண் உபத்திரவங்கள் ஏற்படுகின்றன. ஒவ்வொருவரும் கடவுள் தங்களுக்கு வகுத்திருக்கும் வழி இன்னதென்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அதிலேதான் ஒருவனுடைய சாமர்த்தியம் இருக்கிறது. அத்தங்கா! நீ எதற்காக இந்தப் பூவுலகத்தில் பிறந்தாயோ அதை நீ இன்னும் தெரிந்து கொள்ளவில்லையென்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்......”

“ரொம்ப உண்மை, சுண்டு! நான் இந்த உலகில் ஏன் பிறந்தேன் என்பது எனக்கு இன்னும் தெரியவில்லைதான்!” என்றாள் சீதா.

“நீ உன் கஷ்டங்களினால் மனங்கசந்து இவ்விதம் சொல்கிறாய். நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை. வாழ்க்கையில் உன்னுடைய துறை இன்னது என்பதை நீ இன்னமும் அறிந்து கொள்ளவில்லையென்றுதான் சொல்கிறேன். நான் கூறப் போவதில் உனக்கு ஒருவேளை நம்பிக்கை இல்லாமலிருக்கலாம். அல்லது நான் சொல்வதை ஒருவேளை நீ விளையாட்டாக எடுத்துக்கொண்டு கேலிப் பேச்சுப் பேசலாம். அதனாலெல்லாம் என்னுடைய முடிவில் மாறுதல் ஏற்படப் போவதில்லை. உனக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவுதான் என்பதாகத் தீர்மானித்துக் கொள்வேன்......”

“நான் கேலி ஒன்றும் செய்யவில்லை, சுண்டு! நான் கெட்ட கேட்டுக்குக் கேலி வேறேயா? உன் கருத்தைச் சொல்லு!”

“அத்தங்கா! நீ நடிப்புக் கலைக்காகப் பிறந்தவள் என்பது என் தீர்ந்த அபிப்பிராயம். நாடகமேடையில் ஏறி நடித்தாயானால் உனக்கு இணை இந்தியாவிலே யாரும் இல்லையென்று புகழ் பெறுவாய். ஸினிமாத் துறையில் பிரவேசித்தாயானால் கிரேடா கார்போவையும், ரிடா ஹேவொர்த்தையும், நார்மா ஷியரரையும் போல உலகப் பிரசித்தியே அடைந்துவிடுவாய். உன்னுடைய முகத்தைக் கடவுள் ஸினிமாத் திரைக்கு என்றே அமைத்திருக்கிறார்.”

சீதாவின் உள்ளத்தில் பழையபடி சபலம் முளை விட்டு எழுந்தது. சுண்டுவின் சமத்காரமான பேச்சு அவளுடைய தற்பெருமை உணர்ச்சியைத் தூண்டி விட்டது.

“இதுவரையில் என்னை அழகானவள் என்று யாருமே சொன்னதில்லை. எனக்கும் வயது இருபத்தெட்டு ஆகப் போகிறது. நீதான் முதன் முதலாகச் சொல்கிறாய்!” என்றாள்.

“நானும் உன்னை அழகி என்று சொல்லவில்லை. அழகு யாருக்கு வேண்டும், அத்தங்கா! பெரும்பாலும் அசடுகள்தான் அழகாயிருப்பார்கள். அழகு வேறு; முகத்தில் ஜொலிக்கும் அறிவின் களை வேறு. நாடகமேடைக்கும் ஸினிமாத் திரைக்கும் வேண்டியது அழகு அல்ல; Face cut தான் வேண்டும். அது உன்னிடம் இருக்கிறது.”

“என் முகத்தில் ஒரு வெட்டுக் காயம்கூட இல்லையே, சுண்டு!”

“பார்த்தாயா? கேலி செய்கிறாயல்லவா? அதனால்தான் உன்னிடம் சொல்லத் தயங்கினேன்.”

"கோபித்துக் கொள்ளாதே, சுண்டு! நான் கேலி செய்தது தப்புத்தான். மேலே நீ சொல்ல உத்தேசித்திருந்ததைச் சொல்லு."

"வெள்ளித் திரைக்கு மிகவும் பொருத்தமான முகவெட்டு உனக்கு இருக்கிறது. இந்த முக வெட்டைக் கொண்டு நீ உலகத்தையே வென்று விடலாம். முகவெட்டு மாத்திரம் அல்ல; உள்ளத்தின் உணர்ச்சிகளையெல்லாம் தெள்ளத் தெளிய முகத்தில் வெளியிடும் சக்தியும் உனக்கு இயற்கையாகவே அமைந்திருக்கிறது. நீ சம்பாஷணை செய்யும்போதும் மேடையில் பிரசங்கம் செய்யும்போதும் நான் கவனித்துப் பார்த்திருக்கிறேன். ஆத்திரமோ, கோபமோ, சோகமோ, மகிழ்ச்சியோ,—எந்த உணர்ச்சியானாலும் உன் முகத்திலே பளிச்சென்று தெரிகிறது. நீ வாய் திறந்து பேச வேண்டிய அவசியமில்லை. உன்னுடைய கண்கள் பேசுகின்றன; உன் புருவங்கள் பேசுகின்றன; உன் நெற்றியின் சுளிப்புப் பேசுகிறது; உன் உதடுகளின் துடிப்புப் பேசுகிறது. இது மாத்திரந்தானா? உன்னுடைய நடையின் அழகைப் பற்றி யாராவது உனக்குச் சொல்லியிருக்கிறார்களோ, என்னவோ தெரியவில்லை. உன் நடையின் அழகோடு எந்த ஹாலிவுட் ஸினிமா நட்சத்திரத்தின் நடை அழகையும் ஒப்பிட முடியாது. அன்னப் பட்சி தண்ணீரில் 'கிளைட்' பண்ணுவதுபோலே நீ நடக்கிறாய். நம்முடைய நாட்டுப் பழங்காலக் கவிகள் 'அன்ன நடை'யைப் பெண்களின் நடையோடு ஒப்பிட்டிருப்பதின் பொருத்தம் உன்னுடைய நடையைப் பார்த்த பிறகுதான் எனக்குத் தெரிந்தது. இன்றைக்குக்கூட நான் உனக்குக் கொஞ்சம் பின்னாலேயே வந்து கொண்டிருந்ததின் காரணம் அதுதான். உன் நடையின் அழகைப் பின்னாலிருந்து பார்த்துக் கொண்டே வந்தேன். இந்த மாதிரி நடையுள்ளவள் ஒருத்தியை ஹாலிவுட் டைரக்டர்கள் கண்டால் விடவே மாட்டார்கள். தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடுவார்கள்!"

"சுண்டு! நீ மட்டும் என்னைவிட நாலு வயது பெரியவனாயிருந்து என்னைக் கலியாணம் செய்து கொண்டிருந்தால் எனக்கு இந்த மாதிரி கஷ்டம் எல்லாம் ஒன்றும் வந்திராது."

"அத்தங்கா! முதலிலேயே நான் சொல்லிவிட்டேனே! காதல், கலியாணம் இதெல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை என்று. உண்மையில் எனக்குக் கலியாணம் ஆகிவிட்டது. கலைத்தேவியை நான் மணந்துகொண்டு விட்டேன். வேறு மானிடப் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளும் உத்தேசமே எனக்குக் கிடையாது. நீ எதற்காகப் பிறந்தாய் என்பதை நான் தெரிந்து கொண்டிருப்பது போலவே நான் பிறந்த காரணத்தையும் தெரிந்து கொண்டிருக்கிறேன். இந்தியாவில் ஸினிமாக் கலையை உத்தாரணம் செய்வதற்காக நான் பிறந்தவன். தென்னிந்தியாவில் அறிவாளிகள் எத்தனையோ பேர் உண்டு. ஆனால் அவர்களில் யாரும் இதுவரையில் ஸினிமாக் கலையில் கவனம் செலுத்தவில்லை. அசடர்களும் தூர்த்தர்களும் பிழைப்புக்கு வழியில்லாதவர்களுந்தான் ஸினிமாவுக்கு வந்திருக்கிறார்கள். ஏதோ பி. ஏ. பரிட்சையை முடித்துத் தொலைக்க வேண்டுமென்பதற்காகப் படிக்கிறேன். பி. ஏ. பாஸ் செய்ததும் ஸினிமாத் துறையில் இறங்குவேன். நீயும் என்னோடு ஒத்துழைத்தால் தென்னிந்தியாவை மட்டுமல்ல, இந்தியாவை மட்டும் அல்ல. உலகத்தையே நாம் வெற்றி கொள்ளலாம். நான் இன்றைக்குச் சொல்லுகிறேன், கேள்! டைரக்டர் ஸியாமசுந்தர் எடுக்கப் போகும் முதல் படம் உலகப் பிரசித்தி அடையப் போகிறது. ஹாலிவுட் அகாடமி பரிசு அதற்கு நிச்சயம் கிடைத்தே ஆகவேண்டும் ......"

"சுண்டு! டைரக்டர் ஸியாமசுந்தர் என்பது யார்?"

"யாரா? நான்தான்! என் உண்மைப் பெயர் ஸியாமசுந்தரன் என்பது உனக்குத் தெரியாது. என் தகப்பனார் ஒரு தடவை 'ஸியாம சுந்தர மதன மோகன!' என்னும் ஹிந்துஸ்தானி கீதத்தைக் கேட்டாராம். அது ரொம்ப அவருடைய மனதைக் கவர்ந்ததாம். ஆகையால் எனக்குச் ஸியாமசுந்தர் என்று பெயர் வைத்தார். ராஜம்பேட்டைப் பட்டிக்காட்டில் 'ஸியாமசுந்தர்' என்ற பெயர் வாயில் நுழையவில்லை. ஆகையால் பெயரைச் சம்பந்தமில்லாமல் சுருக்கிச் 'சாம்பு'

என்று கூப்பிட்டார்கள். இந்த ஊரில் வந்து ஹைஸ்கூலில் சேர்ந்த பிறகு கே. எஸ். சுந்தர் என்று பெயர் வைத்துக் கொண்டேன். அதையும் சுருக்கித் தொலைத்துச் சுண்டு என்றும், சுந்து என்றும் அழைக்கத் தொடங்கினார்கள். அத்தங்கா! நீ ஒருத்தியாவது என்னை முழுப் பெயரையும் சொல்லி அழைத்தால் மிகவும் மகிழ்ச்சி அடைவேன். என்னுடைய முதல் படத்தில் நீ கதாநாயகியாக நடிக்க ஒப்புக் கொண்டால் நான் சொல்ல முடியாத சந்தோஷம் அடைவேன். என்னால் நீ எவ்வளவு பெயரும் புகழும் அடையப் போகிறாய் என்பதை நீயே பார்க்கப் போகிறாய்!"

சீதாவின் உள்ளத்தில் முதலிலேயே சபலம் ஏற்பட்டிருந்தது. இப்போது அது கொழுந்து விட்டு எரிந்தது. எதற்காக நம்மை மதிக்காத அன்பில்லாத புருஷனிடம் போய்க் கஷ்டப்பட வேண்டும்? வாழ்க்கையை ஏன் நரகமாக்கிக் கொள்ளவேண்டும்? இப்படி நம்மிடம் தேவதா விசுவாசம் வைத்திருப்பவனுடைய முயற்சியில் ஏன் சேர்ந்து உதவி செய்யக்கூடாது?

இப்படி எண்ணமிட்டபோது பட்டாபிராமனுடைய வீட்டுச் சுவரில் கண்ட காந்தி மகாத்மாவின் முகம் சீதாவின் மனதின் முன்னிலையில் வந்தது. காந்திஜியின் கருணை ததும்பும் கண்கள் அவளை உற்று நோக்கின. "பேதைப் பெண்ணே! பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு அரை மணி நேரங்கூட ஆகவில்லையே? அதற்குள் இந்தச் சஞ்சலமா? என் முன்னிலையில் கடவுள் சாட்சியாக எடுத்துக் கொண்ட பிரதிக்ஞையைக் காற்றில் விடப் போகிறாயா?" என்று கேட்பதுபோல் இருந்தது.

சீதா ஆகாசத்தை நோக்கினாள். வான மெங்கும் ஒரு அங்குல இடம் காலியின்றிச் சிதறிக் கிடந்த நட்சத்திரச் சுடர்மணிகள் அவ்வளவும் கண்ணைச் சிமிட்டிச் சீதாவை எச்சரிப்பது போலத் தோன்றியது.

அடுத்த ஸ்டேஷனில் வண்டி கிளம்பி விட்டது என்பதற்கு அறிகுறியாக டிங், டிங் என்று ஸ்டேஷன் மணி அடித்தது. சீதா கூறினாள்:—

"சியாமசுந்தர், உன்னுடைய அபிமானத்தையும் நீ என்னிடம் வைத்திருக்கும் நம்பிக்கையையும் பெரிதும் பாராட்டுகிறேன். ஆனால் ஒரு மணி நேரத்துக்கு முன்னால் நான் ஒரு பிரதிக்ஞை எடுத்துக் கொண்டேன். என்னுடைய கணவருக்கும் எனக்கும் ஒத்துக் கொள்ளவில்லை யென்றும் அதனாலேதான் எனக்கு இந்தக் கஷ்டங்கள் எல்லாம் வந்தன என்றும் உனக்குத் தெரியுமல்லவா? இன்னும் ஒரு தடவை அவருடன் குடும்ப வாழ்க்கை நடத்தப் பார்ப்பது என்றும் கூடியவரையில் ஒத்துப் போகப் பார்ப்பது என்றும் பிரதிக்ஞை செய்தேன். மகாத்மா காந்தியின் உருவப் படத்தின் முன்னால் அவ்வாறு சபதம் செய்தேன். அதை இவ்வளவு சீக்கிரத்தில் கைவிட மனம் வரவில்லை. கல்கத்தாவுக்குப் போய் அவரைப் பார்த்து இல்வாழ்க்கைக்கு ஒரு சான்ஸ் கொடுத்துப் பார்க்கப் போகிறேன். இதுதான் கடைசி சான்ஸ். இதிலும் ஒன்றும் சரிக்கட்டி வராவிட்டால் உன்னிடம் வந்து சேருகிறேன்" என்றாள் சீதா.

"அத்தங்கா! நான் சொல்கிறேன், கேள்! உன் கணவன் சௌந்தரராகவன் மட்டும் அறிவுடையவனாயிருந்தால் உன்னைக் குடும்ப வேலை செய்வதற்கு வைத்துக் கொள்ள மாட்டான். ஸினிமாக்கலைக்கு உன்னை அர்ப்பணம் செய்வான். குடும்ப வேலை பார்க்க லட்சம் கோடி ஸ்திரீகள் இருக்கிறார்கள். ஆனால் ஸினிமாவில் நடித்துப் பெயர் வாங்கக் கோடியில் ஒருவராலேதான் முடியும். அது போனால் போகட்டும். உன் தலைவிதியின்படி நடக்கிறது. இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறாய்? உன்னோடு கல்கத்தாவுக்கு வரட்டுமா? மதராஸ் வரையிலாவது வரட்டுமா?"

"வேண்டாம், சியாமசுந்தர்! உன்னோடு பேசிக் கொண்டே போனால் என்னுடைய சஞ்சல மனது மாறிப் போய்விடும். இங்கேயே டிக்கட் வாங்கிப் பெண்பிள்ளைகள் வண்டியில் என்னை ஏற்றி விட்டுவிடு; அதுவே போதும்!" என்றாள் சீதா.

"சூரியா என்பேரில் நிச்சயம் கோபித்துக் கொள்ளப் போகிறான்" என்றான் சுண்டு.

"எதற்காகக் கோபித்துக் கொள்ள வேண்டும்? சூரியா ராஜம்பேட்டைக்குத் திரும்பி வந்ததும் அவன் என் விஷயத்தில் எடுத்துக் கொண்ட

சிரத்தைக்காக என்னுடைய வந்தனத்தைத் தெரியப்படுத்து."

"ராஜம்பேட்டைக்கு அவன் திரும்பி வருவானா என்பதே சந்தேகம்."

"ஏன் அப்படிச் சொல்கிறாய்? ராஜம்பேட்டைக் கிராமத்தைச் சொர்க்கமாக்கிவிடப் போகிறேன் என்று சூரியா சொன்னானே?"

"அந்த முயற்சியில் சூரியாவுக்குத் தோல்விதான். உனக்குத் தெரியுமா, அத்தங்கா! தபால்கார பாலகிருஷ்ணன் வேலையை விட்டுவிட்டு இப்போது கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்து விட்டான். நம்ம பக்கத்தில் வேலை செய்து வருகிறான். சூரியாவின் முயற்சியை உருப்படாமல் அடிப்பதே அவனுடைய முக்கிய நோக்கமாக இருக்கிறது. சூரியா எங்கள் ஆட்களுக்கெல்லாம் முன்னைப்போல் ஒட்டிக்கு இரட்டி கொடுத்தும் பயனில்லை. அவர்களுக்குத் திருப்தி இல்லை. 'நிலம் உழுகிறவனுக்குச் சொந்தம்' என்று சொல்லத் தொடங்கி விட்டார்கள். ஊரில் எல்லாருடைய நிலமும் சாகுபடியாகிவிட்டது. நம்முடைய நிலம் மட்டும் பாதிக்குமேல் தரிசு கிடக்கிறது. சூரியாவின் மனது ரொம்பவும் ஒடிந்து போய்விட்டது."

"அந்தப் பாலகிருஷ்ணன் பேரில் எனக்கு எப்போதும் சந்தேகந்தான். அவன் ரொம்பப் பொல்லாதவன். எங்களைப் பற்றி ஒரு குப்பைப் பத்திரிகையில் கன்னாபின்னா வென்று எழுதியிருந்ததல்லவா? அதெல்லாம் கூட பாலகிருஷ்ணனுடைய வேலையோ என்று சந்தேகித்தேன்."

"இல்லவே இல்லை, அத்தங்கா! வீண் பழி சுமத்தாதே! பாலகிருஷ்ணனிடம் வேறு என்ன குற்றம் இருந்தாலும் உன்னைப் பற்றிய அவதூறு அவன் எழுதவில்லை. உன்னிடம் அவனுக்குள்ள மதிப்பையும் அபிமானத்தையும் பல முறை என்னிடம் தெரிவித்திருக்கிறான். உன்னைக் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்க்க வேண்டும் என்று அவனுக்கு ரொம்ப ஆசை."

"அந்த மட்டில் சந்தோஷந்தான்."

"உன்னைப் பற்றித் தூண்டுப் பிரசுரம் போட்டதும் மஞ்சள் பத்திரிகையில் எழுதியதும் யார் என்று எனக்குத் தெரியும். எல்லாம் நம்ம ஊர் சீமாவய்யர் செய்யும் வேலைதான்!"

"ஐயையோ! நம்ம சீமா மாமாவா அப்படியெல்லாம் எழுதுகிறார்? நம்ப முடியவில்லையே!"

"நம்பத்தான் வேண்டும். வேறு என்ன செய்வது? எனக்கு நிச்சயம் தெரியும். பிளாக் மார்க்கெட்டில் இவ்வளவு நாள் சம்பாதித்தது சீமா மாமாவுக்குப் போதவில்லை. தனக்கு வேண்டிய ஆசாமி சேர்மனாக வர வேண்டும் என்று ரொம்பவும் பாடுபட்டார். அப்படி வருவதற்கு நீ தடையாயிருந்தாய். அதனாலேதான் அப்படியெல்லாம் எழுதப் பண்ணினார். ஒரு நாளைக்கு என்னிடம் சீமா மாமா சிக்கிக்கொள்ளப்போகிறார். அப்போது செம்மையாக அவருக்குப் புத்தி கற்பிக்கப் போகிறேன்!"

"அதெல்லாம் ஒன்றும் வேண்டாம், சுண்டு! ஏதாவது எழுதி விட்டுப் போகட்டும்! எனக்கு இல்லாத கோபம் உனக்கு என்னத்திற்கு?"

"உனக்குக் கோபம் இல்லையென்றால் நான் விட்டுவிடுவேனா? ஒரு கை பார்க்கத்தான் போகிறேன். அத்தங்கா! நீ மட்டும் இங்கு இருந்திராவிட்டால் அத்திம்பேருக்கு ஒரு நாளும் சேர்மன் வேலை ஆகியிராது. அதை என் அம்மாவும் அக்காவும் எண்ணிப் பாராததை நினைத்தால் எனக்கு வருத்தமாயிருக்கிறது. அம்மாவாவது எப்போதும் ஒரு மாதிரி என்பது தெரிந்த விஷயம். லலிதா எதனால் இவ்வளவு கொடுமையுள்ளவளாகி விட்டாள் என்பதுதான் தெரியவில்லை. உன்னை அர்த்தராத்திரியில் வீட்டை விட்டுக் கிளம்பும்படி செய்து விட்டாளே!"

"லலிதாவைப் பற்றி ஒன்றும் சொல்லாதே, சுண்டு! அவளைப்போல் உத்தமி உலகத்திலேயே கிடைக்க மாட்டாள். என்னுடைய காலக்கோளாறு, நான் இப்படிக் கிளம்ப வேண்டி ஏற்பட்டது."

தூரத்தில் ரயில் வரும் சத்தம் கேட்டது. சில நிமிஷத்துக்கெல்லாம் 'புப், புப்' என்று புகை விட்டுக் கொண்டும், 'கிரீச்' என்று கத்திக் கொண்டும் ரயில் வந்தது. பெண்பிள்ளை வண்டியில் சீதா ஏறி உட்கார்ந்து சுண்டுவிடம் விடை பெற்றுக் கொண்டாள். ரயில் புறப்பட்டது.




### சரிதான்!

"என்ன ஸார்! உங்களைப் பார்த்துவிட்டு வரலாம் என்றுதான் கிளம்பினேன்."

"நானும் உம்மைப் பார்த்துவிட்டு வரலாம் என்றுதான் வருகிறேன்."

"என்ன! உங்களுடைய பொடி டப்பியும் காலியாகி விட்டதா?"

★

### கலகம்!

அவள்:—குழந்தை என்னுடைய முக ஜாடையைக் கொண்டிருப்பதாக அடுத்த வீட்டு மாமி சொல்லுகிறார்!

இவன்:—நானும் அப்படித்தான் நினைத்தேன். குழந்தையைப் பற்றிக் கேவலமாகச் சொன்னதாக நினைத்துவிடுவாயோ என்று சொல்லாமலிருந்தேன்!

★

### அவகாசம் இல்லை!

கணவன்:—வாசலில் நின்று உன்னோடு ஓயாமல் சளசளவென்று பேசிக்கொண்டிருந்தது யார்? உள்ளே அழைத்துக்கொண்டு வந்து பேசப்படாதோ?

மனைவி:—அந்த ஓவர்ஸீயர் அகத்து அம்மாமி வந்திருந்தாள். உட்கார்ந்து பேச அவகாசம் இல்லையென்று வாசலிலேயே பேசிவிட்டுப் போய்விட்டாள்!

★

### சில்லறை இல்லை!

பிச்சைக்காரன்:—சாமி, காலணா பிச்சை போடுங்க, சாமி!

பெரிய மனிதர்:—காலணாவாக இல்லை; ஒரு அணாவாக இருக்கிறது!

பிச்சை:—பரவாயில்லை; அந்த ஒரு அணாவையாவது போடுங்க, சாமி!

### என்ன செய்வது?

குமாஸ்தா:—நாம் கொடுக்க வேண்டிய பாக்கியைப் பற்றிக் காகிதக் கடைக்காரர் ஒரு பெரிய கதையே எழுதி யிருக்கிறான்! என்ன செய்வது?

பத்திரிகை ஆசிரியர்:—செய்வதற்கு என்ன இருக்கிறது? ஸ்டாம்பு வைத்திருந்தால் திருப்பி அனுப்பும்; இல்லாவிட்டால் குப்பைக் கூடையில் போடும்!

★

### நியாயம்!

டாக்டர்:—தலைவலி மண்டையைப் பிளக்கிறது; ஜுரமும் கடுமையா யிருக்கிறது. தாங்க முடியவில்லை. டாக்டரிடம் போக வேண்டும்.

நண்பர்:—என்ன, நீங்களா டாக்டரிடம் போகவேண்டும்? நீங்களே ஒரு பிரபல டாக்டராயிற்றே! உங்களைத் தேடிக்கொண்டு எத்தனையோ நோயாளிகள் வருகிறார்களே!

டாக்டர்:—அது வாஸ்தவந்தான், ஸார்! ஆனால் நான் 'பில்' பண்ணுவது அதிகமா யிருக்குமே!

# பொல்லாத குழந்தைகள்

"அருணா"

புகைவண்டி சென்னையை நெருங்க நெருங்கக் கமலாவின் மனதில் படபடப்பு அதிகரித்துக்கொண்டே வந்தது. அன்று கூறியபடி தான் வருவதை முன்னாலேயே அவருக்கு அறிவித்திருந்தால் ரயிலடிக்கு வந்திருப்பார். இல்லை, வரவேண்டாம் என்று பதிலெழுதி யிருப்பாரோ, என்னவோ? சரி, கடிதம்தான் எழுதவில்லையென்றால் அண்ணாவை அழைத்து வந்திருந்தால் அவருக்காகவாவது தன்னுடன் பேச அவர் முன்வரலாம். சே! இதென்ன! ஒரு மூன்றாம் மனிதரின் உதவியால் தான் நமக்குள் சமரசம் ஏற்பட வேண்டுமா, என்ன? நமக்குள் தோன்றிய மனவேற்றுமையை நாமே தீர்த்துக் கொள்ள முடியாமல் பிறர் தலையிட்டுச் செய்து வைக்கும் சமாதானம் எத்தனை நாள்தான் நீடிக்கும்? போகட்டும்; குழந்தைகள் மணி, பாலு இவர்கள் மூலமாவது அவருடைய மன்னிப்பைப் பெறலாமென்றால் அது முடிகிற காரியமாகத் தோன்றவில்லை. ஏனென்றால் குழந்தைகள் விஷயமாக விளைந்த தகராறு தானே நம்மைப் பிரித்து வைத்தது!

'குழந்தைகள்' என்றவுடன் கமலாவின் சிந்தனைக்கடலில் பழைய நினைவுகள் பல, அலைகளாக மோதிக்கொண்டு வந்தன. குழந்தை ஒன்றின் மூலம் வாழ்க்கையில் பிணைக்கப்பட்ட அவ்விருவரும் குழந்தைகள் மூலமாகவே பிரிக்கப்பட்டது இயற்கையே போலும்!

★

ஆம், எட்டு வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவம் அது. கமலா 'இன்டர்மீடியேட்' தேறிவிட்டு மேல் படிப்புக்குச் சென்னைக் கல்லூரியொன்றில் சேர வேண்டுமென்ற நோக்கத்துடன் தன் மாமா வீட்டிற்குத் தாயாருடன் வந்திருந்தாள். கமலாவுக்கோ தினம் மாலை நேரத்தில் உலாவச் சென்று ஊரைச் சுற்றிப் பார்த்து வரவேண்டுமென்று ஆசை. மருமாளின் மனப்போல் அழைத்துச் செல்ல மாமாவுக்கு இஷ்டமிருந்த போதிலும் அவகாசம் இல்லாது போயிற்று. நாலைந்து நாட்களில் சென்னையில் முக்கியமான இடங்களையும் போக்குவரத்து மார்க்கங்களையும் கமலாவுக்கு அறிமுகப்படுத்திவிட்ட பிறகு, "இதோ பார், கமலா! இனிமேல் ஒரு வாரத்திற்கு எனக்குத் தலைக்கு மேல் வேலை இருக்கிறது. ஆபீஸிலிருந்து வீட்டிற்கு வருவதற்கே இரவு ஏழு மணி ஆகிவிடும். நீயோ காலேஜில் சேரப்போகிற பெண். நினைத்த இடத்திற்குத் தைரியமாகப் போய்வரப் பழக்கம் செய்துகொள்ள வேண்டும். அதனால் இன்றிலிருந்து தினம் மாலை நாலு மணிக்கு மேல் ஆறு மணி வரை நீயே உன் இஷ்டப்படி சுற்றி வரலாம்!" என்று கூறிவிட்டார்.

சாதாரணமாகப் பெண்களுக்கு அவ்வயதில் பிடிக்கும் பித்து—அதாவது, கல்யாணம் செய்துகொள்ளாமல் தனியே நாகரிக வாழ்க்கை நடத்த வேண்டுமென்ற அவா-கமலாவுக்கும் நன்றாகப் பிடித்திருந்தது. சிறு வயதிலே தந்தையை இழந்திருந்த பெண்ணின் போக்கைக் கடுமையாகக் கண்டிக்கத் தாயாருக்கும் மனமில்லை. எனவே, மனக்கோட்டை கட்டியிருந்த வாழ்க்கைக்குத் தன்னைத் தயார் செய்துகொள்ளுவதில் தனியாக வெளியில் சென்று வருவது முதல் படியென்று கருதிய கமலா மறுநாள் மாலையே கிளம்பினாள். ஆனால் அன்றே அவள் எண்ணியதற்கு மாறாக விவாகம் செய்துகொள்ளத் தீர்மானிக்க



நேரிடும் என்று அவள் கொஞ்சங் கூட எதிர்பார்க்கவே இல்லை!

அந்நாட்களில் சென்னையில் கண் காட்சிச்சாலை என்று ஒன்று பெரிதாக முழங்கிக் கொண்டிருந்தது. அன்று அங்கே சென்றிருந்த கமலா கடைகளைச் சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பினாள். தன் பின்னால் "அம்மா, அம்மா!" என்று ஒரு குழந்தை விம்மலுக்கிடையே கூப்பிடுவதைக் கேட்டு அவள் சற்று நின்றாள். குழந்தையைத் தூக்கிக் கொண்டிருந்த வாலிபன் ஒருவன் கமலாவை நெருங்கி, "இந்தாருங்கள், குழந்தை! கடையிலே விட்டுவிட்டீர்கள் போலிருக்கிறது; அழு



கிறான்!" என்று கூறிக் கொண்டே குழந்தையை நீட்டினான்.

கமலாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "இது ஏது, வம்பாக இருக்கிறதே!" என்று எண்ணிய அவளுக்கு முதலில் கோபம்தான் வந்தது. ஆனால் ஏதோ ஓர் உணர்ச்சி — அது வாலிபனின் கவர்ச்சியோ, அல்லது பெண்களுக்கியல்பான வெட்கமோ—பொங்கிவந்த கோபத்தை அடக்கிவிட்டது. கமலாவைத் தூரத்திலிருந்து பார்த்துத் தன் தாயென நினைத்துத் தாவிய குழந்தை, அவள் முகத்தைக் கண்டு மறுபடியும் அழத் தொடங்கி விட்டது. ஆனால் அது வாலிபனிடம் திரும்பிச் செல்லவும் மறுத்து விட்டது. சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்ட கமலாவுக்கு, "மன்னிக்கவும்; குழந்தையின் சொந்தக்காரர்கள் கண் காட்சிச் சாலையிலேதான் இருப்பார்கள். தேடி ஒப்படைத்து விடலாம்-வருகிறீர்களா?" என்று அவ்வாலிபன் கேட்டதும் அது சரியென்றே பட்டது.

கடைகளை ஒரு தரம் சுற்றி வந்து அவர்கள் இருவரும் தாங்கள் சந்தித்த இடத்தை நெருங்கிய பின்பே ஒரு கிழவரும் அவருடைய பெண்ணும் குழந்தையைத் தங்களது என்று கோர வந்தனர். குழந்தை தாயிடம் ஒரே தாவலாகத் தாவிற்று. "ஸார், எங்கள் வயிற்றில் பாலை வார்த்தீர்கள்! உங்களுக்குக் கோடி புண்ணியமுண்டு. குழந்தை பின்னால் வந்து கொண்டிருக்கிறானென்று கடைக்குள் சாமான் வாங்கச் சென்றோம். திரும்பி வருவதற்குள் எங்கேயோ சவாரி விட்டிருக்கிறான். அந்தக் கடையில் கேட்டதற்கு உங்கள் குழந்தையை எடுத்துக் கொண்டு விசாரித்து வந்ததாகச் சொன்னார்கள். நேரமாகி விட்டது; வருகிறேன்......அடுத்த வருஷமே ஸ்ரீராமர் கிருபையால் ஒரு மணிப் பயல் பிறப்பான், உங்களுக்கு!" என்று கிழவர் சரமாரியாகப் பொழிந்து விட்டுச் சென்றார்.

கிழவர் தங்களைத் தம்பதிகளாகத் தப்பர்த்தம் செய்து கொண்டதோ டல்லாமல் ஆசீர்வாதம் வேறு செய்யவே கமலாவின் பாடு திண்டாட்டமாயிற்று. அப்பொழுது அந்தப் பொல்லாத யுவன் 'கலகல' வென்று சிரித்துவிடவே அவள் முகம் செவ்வல்லியெனச் சிவந்து விட்டது. வெட்கித் தலை குனிந்த கமலாவின் பார்வை கைக்கடிகாரத்தில் விழவே, மணி ஏழாகி விட்டதென்பதை அறிந்து அவள் கலக்கமுற்றாள். அவளுக்கு அபயமளிப்பது போல், "உங்களுக்கும் மயிலாப்பூர்தான் போலிருக்கிறது! சுந்தரமையர் வீட்டிலிருந்து நேற்று மாலை அவருடன் கிளம்பும்போது பார்த்தேன்...... தடையொன்றும் இல்லையானால் என் காரிலேயே உங்களை அழைத்துச் செல்கிறேன், நான் இருப்பது உங்கள் வீட்டுக்கு எதிரேதான்!" என்றான் வாலிபன்.

ஆம், கமலாவுக்குப் பளிச்சென்று நினைவு வந்தது — முந்தின தினம் மாலை, தன் கன்னி மனதில் ஒரு நிமிஷம் தோன்றி மறைந்த முகம் அந்த வாலிபனதுதான் என்பது. அதற்கேற்றாற்போல் கண்காட்சிச் சாலையின் வாயிலிலிருந்த பஸ்களைச் சுற்றிக் கூடியிருந்த கூட்டத்தைப் பார்த்த கமலாவுக்கு அன்றிரவு வீடு செல்ல முடியுமென்று தோன்றவில்லை. ஆனால் முன்பின் தெரியாத அவ்வாலிபனுடன் காரில் செல்வதா? ஏதோ சொல்லவேண்டுமென்று நினைத்த அந்த



கமலா:—முன்னே யெல்லாம் உன் புருஷர் சாயங்காலம் ஆபீஸிலிருந்து வரும் போது உனக்குப் பூ வாங்கி வருவாரே! இப்போது அப்படியில்லையா?

கல்யாணி:—ஏன் இல்லை! நேற்றுக்கூட மூன்று வாழைப் பூ வாங்கி வந்தார்!

---

நவநாகரிக மடந்தைக்கு வார்த்தைகள் வாயிலிருந்து வர மறுத்தன. அவள் மனதிலிருந்ததை அவளுடைய கருவிழிகள் மூலம் அறிந்தவன் போல், "நானும் சுந்தரம் மாமாவைப் பார்க்க வருகிறேன். பஸ்ஸை நம்பியிருந்தால் இப்போதைக்குக் கிளம்ப முடியாது!" என்று அந்த வாலிபன் சொல்லிக்கொண்டே காரையும் கொண்டுவந்து நிறுத்திவிட்டான். கமலா காரில் ஏறினாள்.

சற்று நேரத்தில் வீடும் வந்துவிட்டது. வாலிபன் இறங்கிக் கமலாவுக்குக் கதவைத் திறந்துவிட்டு அவளைப் பின் தொடர்ந்தான். கமலாவை எதிர்பார்த்தபடி இருந்த மாமா, "அடேடே! மூர்த்தியா? வா, வா! கமலாவைத் தேடுவதற்கு உன்னிடமிருந்து கார் கேட்க வேண்டுமென்று நினைத்தேன். நீயும் கண்காட்சிச் சாலைக்குப் போயிருந்ததாகத் தெரிய வந்தது. முன்னமேயே உங்களை அறிமுகம் செய்துவைக்காமற் போனேனே என்று வருத்தப்பட்டேன். ஆனால் அந்தச் சிரமத்தை நீங்கள் எனக்கு வைக்க இஷ்டப்படவில்லை போலிருக்கிறது!...... மற்றொரு காரியம். இன்று வெள்ளிக்கிழமை. கமலாவுக்காக உன் ஜாதகத்தைக் கேட்க வருவதாக இருந்தேன். இப்பொழுது வரலாமா?" என்று வினவினார்.

'டக்'கென்று வந்தது மூர்த்தியின் பதில்! "அவசியமில்லை, மாமா! மனம் ஒத்துப் போன பிறகு ஜாதகம் ஒத்துக் கொள்ள வேண்டுமென்பதில்லை. முகூர்த்தம் பாருங்கள், போதும்!" என்று சொல்லி விட்டான்.

கமலாவின் பக்கம் திரும்பிய மாமா அவளுடைய அழகிய முகத்தில் மகிழ்ச்சி பரந்திருக்கக் கண்டார்.

அப்புறம் என்ன? ஊரைச் சுற்றி அழைத்துச் செல்லத் துணையும் கிடைத்தது; காரும் கிடைத்தது. அந்த ஆனந்தத்தில் கல்லூரியில் இடத்துக்காக விண்ணப்பம் போடக்கூட மறந்து விட்டாள் கமலா.

★

அன்று காட்சிச் சாலையில் கிழவர் ஆசீர்வதித்த வாக்கு வீண் போகவில்லை; மறு வருஷமே அவர்களுக்கு ஒரு மணிப் பயல் பிறந்தான்.

மணிக்கு இரண்டு வயதில் பாலு பிறந்தான். பாலுவுக்கு ஓர் ஆண்டு நிறைந்திருக்கும். அதுவரை வெகு உல்லாசமாக மிதந்து வந்த கமலாவின் வாழ்க்கைப் படகு திடீரென்று புயல்களாலும் சுழல்களாலும் குழப்பட்டது. அவளுக்கும் மூர்த்திக்கு மிடையே சின்னஞ்சிறு விஷயங்களில்கூட மனவேற்றுமை யென்னும் விஷப்பூண்டு எங்கிருந்தோ முளைத்தது. முக்கியமாகக் குழந்தைகளின் வளர்ப்பில் அவர்களிடையே தோன்றிய சிறு அபிப்பிராய பேதங்கள் பெரும் பூசல்களாக வலுத்தன. பூசல்களைத் தொடர்ந்து இரண்டொரு நாள் தம்பதிகளிடையே மௌனம் நிலவுவதும் வழக்கமாகி விட்டது. தாழ்ந்துதான் போவோமே என்று கமலாவுக்குத் தோன்றவில்லை; விட்டுக் கொடுக்கலாமென்று மூர்த்திக்கும் தோன்றவில்லை. அது போன்றதொரு சச்சரவின் விளைவாகத்தான் கமலா பிறந்தகம் போக நேர்ந்தது.

அன்று விடுமுறை நாள். மணி, பாலுவின் விளையாட்டுச் சாமானைப் பிடுங்கிக் கொண்டதால் அவன் வீறிட்டு அலறினான். மூர்த்தி மணியை அடித்து விட்டான். "விவரம் தெரியாத குழந்தையை இப்படித்தான் போட்டு அடிப்பதாக்கும்!" என்று முணுமுணுத்த கமலாவை நோக்கி, "ஆமாம், செல்லம் கொடுத்துக் குழந்தைகளைக் குட்டிச் சுவராக்கிவிடு!" என்று மூர்த்தி கடிந்தான்.

இந்த வார்த்தைகள் கமலாவின் மனதில் குமுறிக்கொண்டிருந்தன. சிறிது நேரம் கழித்து மணி ஏதோ விஷமம் செய்யவே அவனை அவள் நையப் புடைத்துவிட்டாள். அது சமயம் மூர்த்தி குறுக்கிட்டு, "எல்லோரும் பிறருக்கு உபாத்தியாயர்கள்! குழந்தையைத் தான் மட்டும் அடிக்கலாம் போல் இருக்கிறது. அப்பப்பா! எப்பொழுது பார்த்தாலும் ஒரே

ரகளைதான்! இனிமேல் இந்த வீட்டில் இருந்தால் பைத்தியம் பிடித்துவிடும்!'' என்று சலிப்புடன் கூறினான். அன்று வெளியே சென்றவன், இரவு வெகு நேரங் கழித்துத்தான் திரும்பி வந்தான்.

இச் சம்பவத்திற்குப் பிறகு நிலவிய மௌனம் ஒரு வாரமாகியும் கலைந்தபாடில்லை. இவ்வாறிருக்கையில் அண்ணனிடமிருந்து ஊரில் திருநாளுக்கு அழைப்பு வரவே கமலா ஊருக்குக் கிளம்பிவிட்டாள். அவள் பயணத்துக்கு ஆயத்தஞ் செய்ததைக் கண்ட மூர்த்தி டிக்கெட்டையும் வாங்கிக் கொடுத்துவிட்டான்.

சென்ற புதிதில் நாலைந்து நாட்கள்வரை கமலா பிறந்தகத்து மகிமையில் மகிழ்ச்சியுற்றபோதிலும் மெள்ள மெள்ளத் தன்னைத் தானே நொந்துகொள்ளத் தொடங்கினாள். அண்ணனிடமோ, தாயாரிடமோ தான் கணவனுடன் சண்டை போட்டுக் கொண்டு வந்ததாகச் சொல்லிக் கொள்ள அவள் விரும்பவில்லை. மூர்த்தியிடமிருந்து கடிதம் வராததைக் கண்ட அவர்களும் கமலாவை நேரில் கேட்டு அவள் மனதைப் புண்படுத்த விரும்பவில்லை.

நாட்கள் செல்லச் செல்லப் பிறந்தகத்து வாசம் கமலாவுக்கு முள்மேல் நிற்பது போல் தோன்றிற்று. தன் பிடிவாத குணத்தினாலேயே மூர்த்தியின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டோமென்ற நினைவு அவளை வாட்டிற்று. தான் வேலையில் அமர்ந்து என்னதான் சம்பாதித்துப் போட்டாலும் குழந்தைகளுக்குத் தந்தையில்லாக் குறையை ஈடுசெய்ய முடியாதே?

எனவே கமலா நேரில் சென்று கணவனிடம் மன்னிப்புக் கோருவதென்ற முடிவுக்கு வந்தவளாய்ச் சென்னைக்குச் சென்றுகொண்டிருந்தாள்.

புகை வண்டி ரயிலடியை அடைந்ததும் அங்கே கமலாவுக்கு ஓர் ஆச்சரியம் காத்திருந்தது. குழந்தைகளுடன் கமலா ரயிலடிக்கு வெளியே வந்ததும், பிரயாணப் பையுடன் மூர்த்தி உள்ளே நுழைந்ததும் ஒரே சமயத்தில் நிகழவே எதிர்பாராதவிதமாக இருவரும் சந்தித்தனர்!

''அடே, கமலாவா! உன்னை அழைத்து வரத்தான் இதோ காலை வண்டியிலேயே கிளம்புவது என்று நான் வந்தேன். மனைவி என்றால் இந்தமாதிரி யல்லவா கணவனின் கருத்தறிந்து நடக்க வேண்டும்!'' என்று சிரித்துக்கொண்டே மூர்த்தி கூறியதைக் கேட்ட கமலாவின் மகிழ்ச்சி கரை புரண்டோடிற்று.

பிரிவு இருவருக்கு மிடையே யிருந்த பிளவைச் சரிப்படுத்திவிட்டது.



# பரீட்சையோ பரீட்சை!

அங்கு

கடைசி முறையாகப் பந்தை ஓங்கி ஒரு உதை உதைத்துவிட்டு விளையாட்டு மைதானத்தை விட்டுக் கிளம்பினான் சிவராமன். அவனுடன் படித்துக் கொண்டிருந்த பாலுவும், மணியும் அவனைத் தொடர்ந்து கிளம்பினார்கள்.

சிவராமன் எட்டாம் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தான். படிப்பில் அவ்வளவு கெட்டிக்காரனு யில்லாவிட்டாலும் எப்படியோ பரீட்சையில் 'பாஸ்' செய்து விடுவான். வகுப்பில் தனக்குப் பக்கத்தில் பாலு உட்கார்ந்திருக்கும் வரையில் அவனுக்குப் படிப்பைப் பற்றிக் கவலையே இல்லை!

வருஷாந்திரப் பரீட்சை ஆரம்பமாக இன்னும் ஒரு வாரம்தான் இருந்தது. சிவராமனுக்கு இங்கிலீஷ், சரித்திரம், பூகோளம் இவைகள் எல்லாம் சுமாராக வந்துவிடும். ஆனால் அந்தப் பொல்லாத கணக்கு மட்டும் அவனுக்கு வரவே வராது. "கணக்காக மார்க்கு வரும் கணக்கு அடியோடு ஒழிக!" என்று அவன் உள்ளூற எண்ணிக் கொண்டே பாலுவைப் பார்த்து, "டேய் பாலு! பரீட்சைக்கு நன்றாகப் படித்திருக்கிறாயா? பார்த்துப் படிடா! நான் பாஸ் பண்ணுவது உன் கையில்தாண்டா இருக்கிறது!" என்றான்.



இந்தச் சமயத்தில், "என்னடா சிவராம், பரீட்சையெல்லாம் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?" என்று கேட்டுக் கொண்டே எதிரில் வந்தான் நாகராஜன்.

நாகராஜனைக் கண்டால் சிவராமனுக்குப் பயம்! அவன் எட்டாம் வகுப்பில் மூன்று வருஷங்களாகப் படித்துக் கொண்டிருந்தான்! அவனுடைய பரட்டைத் தலையையும், கழுத்தில் கட்டிக்கொண்டிருந்த கைக் குட்டையையும் கண்டால் சிவராமனுக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்காது. ஆகவே சிவராமன் அவனைக் கவனியாமல் அவனுடைய கேள்விகளுக்கும் சரியாகப் பதில் சொல்லாமல் மேலே நடந்தான்.

நாகராஜன் அவன் கையைப் பிடித்துக்கொண்டு "என்னடா அவசரம்? கொஞ்சம் நின்றுதான் போயேன்!—அது சரி; உனக்கு எந்தப் பாடம் ரொம்பக் கஷ்டம்?"

என்று கேட்டான். "கணக்கு" என்று கணக்காகப் பதில் சொன்னான் சிவராமன். உடனே நாகராஜன், "நீ அதைப் பற்றிப் பயப்பட வேண்டாம்!" என்று அவன் காதோடு ஏதோ சொன்னான்.

சிவராமனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. நாகராஜன் கணக்குக் கேள்விகளை 'அபேஸ்' பண்ணிக் கொண்டு வந்து கொடுப்பதாகச் சத்தியம் செய்த பிறகு அவனுக்குப் பரீட்சையைப் பற்றி என்ன கவலை?



அதற்குப் பிறகு அம்மாவிடம் ஏதோ சாக்குப் போக்குச் சொல்லி ஐந்து ரூபாய் வாங்கிக்கொண்டு போய் நாகராஜன் கையில் கேள்வித் தாள்களுக்காகக் கொடுத்த பிறகுதான் சிவராமனுக்குத் தூக்கம் வந்தது!

**வ**ருஷாந்திரப் பரீட்சை ஆரம்பமாகியது. முதல் நாள் தமிழ்; சிவராமன் வெளுத்து வாங்கி விட்டான். அடுத்த நாள் இங்கிலிஷ்; சுமாராக எழுதினான்.

மூன்றாம் நாள் கணக்கு!

பரீட்சை ஹால் கடிகாரத்தில் மணி பத்து அடித்தது. மறுகணம் உபாத்தியாயர் கேள்வித் தாளைக் கொடுத்துக் கொண்டே போனார்.

சிவராமன் மிகவும் அலட்சியமாக அதை வாங்கி மேஜையின்மீது வைத்துக்கொண்டு பார்த்தான். முதல் கேள்வி — ஐயையோ! இரண்டாம் கேள்வி—கேள்வி மூன்று — சிவராமனின் தலை கிருகிரு வென்று சுழன்றது. ஆத்திரமும் கோபமும் ஒரே சமயத்தில் பீறிட்டு எழுந்தன. என்ன அநியாயம்! அந்த முரட்டுப் பயல் நாகராஜன் கொடுத்த கேள்விகளில் ஒன்றாவது வரவேண்டுமே!

சிவராமனுக்குத் துக்கம் பொத்துக் கொண்டு வந்தது. அதே சமயத்தில் நாகராஜனின் பரட்டைத் தலையும் அதை அடுத்துக் கணக்குப் பரீட்சையில் வரப்போகும் பெரிய கோழி முட்டையும் தோன்றி அவன் கண்களில் கண்ணீரை வரவழைத்து விட்டன. இரண்டு மணி நேரத்தை இரண்டு யுகமாகக் கழித்து விட்டுப் பேப்பரில் ஏதோ எழுதிக் கொடுத்து விட்டு அவன் சோர்வுடன் வெளியே வந்து சேர்ந்தான்.

அடுத்த நாள் பரீட்சைக்குத் தெம்பு இல்லாமல் ஹாலினுள் நுழைந்தான் சிவராமன். அப்போது உபாத்தியாயர் அங்குதோன்றி, சமய சஞ்சீவியாக ஒரு விஷயத்தைச் சொன்னார்:

"கணக்குக் கேள்விகள் 'அவுட்' டாகி விட்டதால் நேற்று நடந்த பரீட்சையைத் தள்ளிவிட்டோம். மீண்டும் அடுத்த சனிக்கிழமை பரீட்சை நடக்கும்."

அப்போதுதான் சிவராமனுக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டிருந்த ஏதோ ஒன்று உள்ளே சென்றது போலிருந்தது. ஆயினும் கணக்குப் பரீட்சையைப் பற்றிய அவனுடைய பயம் மட்டும் அவனை விட்டு நீங்கவேயில்லை!

அடுத்த சனிக்கிழமையும் வந்தது. பரீட்சை ஆரம்பமாகியது. உபாத்தியாயர் கேள்வித் தாளைக் கொடுத்தார். சிவராமன் அதை மிகவும் பயபக்தியுடன் வாங்கிப் பிரித்தான். அடுத்த கணம் ஆச்சரியமும், ஆனந்தமும் அடைந்தான். ஏன் தெரியுமா? பரீட்சைக்குக் கொடுக்கப்பட்ட கேள்வித் தாளில் நாகராஜன் கொடுத்த கேள்விகள் எல்லாம் கொஞ்சமும் மாறுதல் இன்றி அப்படியே இருந்தன!

அப்புறம் கேட்கவேண்டுமா? ஏற்கெனவே தயாரித்து வைத்திருந்த விடைகளை அவன் கிருகிரு வென்று எழுத ஆரம்பித்தான்!

# மாப்பிள்ளை அழைப்பு

## வேங்கடலக்ஷ்மி

"மதுரம் அக்கா! நீ இன்னும் தயாராக வில்லையா?—மாப்பிள்ளை அழைப்புக்கு எல்லாம் தயாராய் விட்டதே! அவர்களெல்லாம் நமக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்களே!" என்று உரக்கக் கூவிக்கொண்டே புதுப் புடவை 'சரசர'வென்று சத்தம் செய்ய வேகமாய் அவ்வறைக்குள் நுழைந்தாள் சண்பகலக்ஷ்மி.

அப்பொழுதுதான் சாந்து டப்பியைக் கையில் எடுத்துக் கொண்டிருந்தாள் மதுரம். அவளுக்கு எதிரே கையில் கண்ணாடியுடன் நின்று கொண்டிருந்தான் சிவராஜன். சாந்தைக் குழைத்து அவனுடைய நெற்றியில் ஒரு சிறு பொட்டு வைத்துவிட்டு, "சரிதான், போ! இந்தப் பிள்ளை அழகைப் பார்த்தாயோ, இல்லையோ? மாப்பிள்ளை அலங்காரம் ஒன்றும் பண்ணிக்கொள்ள மாட்டேனென்று என்னைப் பாடாய்ப் படுத்துகிறான்! அப்பொழுதிலிருந்து சிறுப் பிள்ளையிடம் சொல்லுவதுபோல் சொல்லிக் கொண்டிருக்கிறேன்; கையிலே ஒரு மோதிரமாவது போட்டுக் கொள்ளக் கூடாதா!" என்று அங்கலாய்த்துக் கொண்டாள் மதுரம்.

சண்பகலக்ஷ்மி தன் பிள்ளையைப் பார்த்தாள். கண்ணாடியில் சாந்துப் பொட்டுடன் கூடிய தன் முகத்தைப் பார்த்த சிவராஜனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "அசல் மைனர் மாதிரியே யிருக்கிறது, இல்லையா?" என்று தன் தாயாரிடம் கேட்டுக்கொண்டே, தோளில் கிடந்த ஜரிகை அங்கவஸ்திரத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டான்.

"பின்னே கல்யாண மாப்பிள்ளை யென்றால் சும்மாவா?" என்று கேட்ட சண்பகலக்ஷ்மி, "மதுரம் அக்கா! நீ சீக்கிரம் புறப்படேன்; நேரமாகிறது!" என்று அவளைத் துரிதப்படுத்தினாள்.

"இதோ, ஆச்சு!" என்று சொல்லிக் கொண்டே பெட்டியைத் திறந்து ஒரு புதுப் புடவையைக் கையில் எடுத்துக்கொண்டு பக்கத்திலிருந்த ஓர் அறைக்குள் நுழைந்தாள் மதுரம்.

சிவராஜன் அங்கே கிடந்த ஒரு பெட்டியின்மீது உட்கார்ந்து கொண்டான். அவ்வறைக்குள் நாலு பக்கமும் இறைந்து கிடந்த வெள்ளிப் பாத்திரங்களையும், புஷ்பம் சந்தனம் முதலியவைகளையும், மூலைக்கு மூலை சுருட்டிப் போடப்பட்டிருந்த துணிமணிகளையும் கொஞ்சம் ஒழுங்கு செய்தாள் சண்பகலக்ஷ்மி.

வெளியே ஏக சந்தடியும் ரகளையுமாக விருந்தது. வாசலில் மேளச் சத்தத்துடன் பாண்டு வாத்தியத்தின் முழக்கமும் கலந்து வந்தது.

முன்புறம் இருந்த பெரிய பந்தலில் குழந்தைகள் கூச்சலிட்டுக் கொண்டும் கும்மாளமடித்துக் கொண்டும் இருந்தார்கள். மாப்பிள்ளை அழைப்புக்காக நேர்த்தியான மல்லிகைச் சரங்களால் அலங்கரிக்கப்பட்ட மோட்டார் வண்டி வாசல் முகப்பில் நின்று கொண்டிருந்தது. ஸ்திரீகளும் புருஷர்களும் கூட்டமாக நின்றபடி சிவராஜனின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். எங்கும் ஒரே சிரிப்பும் குதூகலமுமாக இருந்தது.

"நேரமாய் விட்டதே! அவர்களையெல்லாம் கூப்பிடுங்கள்!" என்று புரோகிதர் அவசரப்படுத்தினார்.

சிவராஜனின் தகப்பனார் மகாதேவய்யர் பரபரப்புடன் உள்ளே வந்தார்.

"சிவராஜா!" என்ற அவருடைய குரல் எல்லாச் சத்தத்துக்கும் மேலாக எழுந்து எதிரொலித்தது.

"இதோ வந்து விட்டேன்!" என்று சொல்லிக் கொண்டே சிவராஜன் மாப்பிள்ளை அலங்காரத்துடன் வெளியே வந்தான். அவனைத் தொடர்ந்து சண்பகலக்ஷ்மியும் மதுரமும் வெளியே வந்தார்கள்.

சிவராஜன் நல்ல அழகன். அத்துடன் அலங்காரமும் சேர்ந்து கொள்ளவே அளவற்ற வசீகரத்துடன் அவன் விளங்கினான். அந்தக் கோலத்தில் தன் மகனைப் பார்த்த தந்தையின் உள்ளம் உவகையினால் விம்மிற்று.

"சீக்கிரம் வா, அப்பா! எவ்வளவு நேரமாக எல்லோரும் காத்திருப்பது?" என்று கூறியபடியே பந்தலை நோக்கி விரைந்தார் சிவராஜனின் தகப்பனார்.

"மதுரம் அக்கா! அத்திம்பேர் எங்கே?" என்று கேட்டபடி சண்பகலக்ஷ்மி அங்கேயிருந்த வெற்றிலைப்பாக்குத் தட்டுகளில் ஒன்றை எடுத்து அவளிடம் கொடுத்து

விட்டு, இன்னொன்றைத் தானும் எடுத்துக் கொண்டாள்.

"அதோ, பார்! எல்லாருக்கும் முன்னாலேயே அத்திம்பேர் மோட்டாரண்டை போய் நின்று கொண்டிருக்கிறார்!" என்று சுட்டிக் காட்டியபடி கூட்டமாய் நின்று கொண்டிருந்த ஸ்திரீகளண்டை போய் நின்று ஊர்வலத்துடன் செல்லத் தயாரானாள் மதுரம்.

சிவராஜன் மோட்டாரில் ஏறிக்கொண்டான். நாதஸ்வரமும் பாண்டு வாத்தியமும் கலந்து ஒலித்தன. மின்சார விளக்குகளோடு காஸ் லைட்டுகளும் சேர்ந்துவிடவே பட்டப்பகல் போன்ற வெளிச்சம் எங்கும் நிறைந்திருந்தது. விதம் விதமான வாணப் பொறிகள் ஆகாயத்தில் எழும்பின. ஊர்வலம் மெதுவாக நகர ஆரம்பித்தது. நாதஸ்வரக்காரனும் பாண்டு கோஷ்டியினரும் மலய மாருத ராகத்தை அமிருதவர்ஷமாகப் பொழியலானார்கள். சளசளவென்று பேசிக்கொண்டே பெண்கள் மோட்டாரின் பின்னால் நடந்து சென்றார்கள்.

கழுத்தில் ரோஜா ஹாரத்துடன் மன்மதனைப்போல் உட்கார்ந்திருந்த சிவராஜனைக் கண்டதும் மதுரத்தின் நெஞ்சம் உவகையால் விம்மியது. "திரும்பி வந்தவுடனே குழந்தையை நம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் ஞாபகமாகத் திருஷ்டி சுத்திப் போடவேணும்!" என்று சண்பகத்தின் காதில் மெதுவாகச் சொன்னாள்.

புன்சிரிப்புடன் அதற்குத் தலையசைத்தாள் சண்பகலக்ஷ்மி.

சிவராஜன் திரும்பிப் பார்த்தான். அவன் பார்வை மதுரத்தின்மேல் விழுந்தது. கன்னங்கள் அழகாகக் குழிய அவன் முகம் புன்னகையால் மலர்ந்தது. அவனைப் பார்த்தபடியே ஒரு கணம் நின்றுவிட்டாள் மதுரம். அந்த ஒரு கணத்தில் அவளுடைய மனம் எத்தனையோ வருஷங்களுக்கு முன்னால் சென்றுவிட்டது.

## 2

நல்ல நடுப் பகல். மதுரம் கூடத்தில் உட்கார்ந்து ஏதோ வாசித்துக் கொண்டிருந்தாள். அவள் கணவர் சபேசய்யர் ஊஞ்சலில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார். தாளிடாமல் சும்மா சாத்தி வைக்கப்பட்டிருந்த வாசல் கதவு 'கிரீச்'சென்ற சத்தத்துடன் திறந்தது. "பெரியம்மா!" என்று தன்னுடைய கீச்சுக் குரலில் அழைத்துக்கொண்டே கையில் ஒரு சிறிய யானைப் பொம்மையுடன் உள்ளே நுழைந்தான் நான்கு வயதுக் குழந்தையான சிவராஜன்.

"வாடா, ராஜா!" என்று அருமையாக அழைத்துக் கொண்டே எழுந்து போய் அவனை ஆவலுடன் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு உள்ளே வந்தாள் மதுரம்.

"எங்கே, பயலை இப்படிக் கொடு!" என்று கையை நீட்டினார் சபேசய்யர்.

"பெரியப்பா கிட்டப் போடா, கண்ணு!" என்றாள் மதுரம்.

"பெய்யப்பா ஆண்டாம், போ!" என்று சிணுங்கியபடி தன்னுடைய ரோஜாப்பூக் கன்னத்தை மதுரத்தின் தோளில் புதைத்துக்கொண்டான் குழந்தை.

"அட, என் கட்டிக் கரும்பே!" என்று அவனை இறுகப்பிடித்து ஆவலுடன் அவன் கன்னத்தில் முத்த மழை பெய்தாள் மதுரம்.

"போக்கிரி! இனிமேலே என்னிடம் வா, சொல்லுகிறேன்!" என்று பொய்க் கோபத்துடன் அவன் முகத்துக்கெதிரில் விரலை ஆட்டினார் சபேசய்யர்.

மதுரம் சிரித்துக்கொண்டே உள்ளே போய் ஒரு சிறிய வெள்ளித்தட்டு நிறையப் பட்சணங்களை எடுத்து வந்து கூடத்தில் வைத்துவிட்டு, குழந்தையை இடுப்பிலிருந்து இறக்கித் தட்டினருகில் உட்கார வைத்தாள்.



குழந்தை தன்னுடைய தளிர்க் கையால் பட்சணத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக எடுத்துத் தன் குமுத வாயில் போட்டுக் கொள்வதையும், அப்பொழுது அவனுடைய மலர்க்கன்னம் குழியப் புன்முறுவல் மலர்வதையும் பார்த்து அப்ப

டியே இன்ப வெள்ளத்தில் திளைத்துப் போனான் மதுரம்.

ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த சபேசய்யர் வெற்றிலையில் சுண்ணாம்பு தடவியபடி அந்தக் காட்சியைப் பார்த்து ஆனந்தப்பட்டுக்கொண் டிருந்தார்.

“ராஜா! எங்கேடா போயிட்டே?” என்று வாசலிலிருந்து குரல் கொடுத்துக் கொண்டே வேகமாய் உள்ளே நுழைந்தாள் சண்பகலக்ஷ்மி.

குழந்தை வாயிலும் கையிலுமாகப் பட்சணத்துடன் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் அவளுடைய கண்கள் கோபத்தினால் சிவந்தன. ஆத்திரத்தில் ஊஞ்சலில் உட்கார்ந்திருந்த சபேசய்யரையும் கவனியாமல் அவள் உரத்த குரலில், “கன்னுயிருக்கு! உங்கள் ஹோட்டலிலே பண்ணுகிற பட்சணங்களைத் தின்பதற்குக் குழந்தைதான் அகப்பட்டானா? கண்ட கண்ட எண்ணெயில் பண்ணுகிற இந்த இழவு பட்சணங்களெல்லாம் குழந்தையின் உடம்புக்கு ஆகுமா? காலைக்கு உடம்புக்கு வந்தால் யார் படுகிறது? அவரவர்கள் குழந்தையானால் தெரியும்!—எழுந்திரடா, சனியனே! யார் வீட்டிலே என்ன பட்சணம் வைத்திருக்கிறார்களென்று காக்கைத் நீட்டி வைத்துக் கொண்டிருக்கிறாயோ? வா, வீட்டுக்கு! அப்பா கிட்டச் சொல்லி உன்னை என்ன செய்யச் சொல்கிறேன், பார்!” என்று படபட வென்று பொரிந்து கொண்டே குழந்தையின் முதுகில் ஓங்கி ஒரு அறை வைத்து விட்டு, அவனைக் கரகரவென்று இழுத்துக் கொண்டு வாசலுக்குச் சென்றாள்.

பயத்தினால் நடுங்கிப்போன குழந்தை ‘ஓ’ வென்று அலற ஆரம்பித்து விட்டான். மீண்டும் அவன் முதுகில் ஒரு அறை வைத்து விட்டு, எதிரிலிருந்த தன் வீட்டுக்குள் அவனுடன் நுழைந்தாள் சண்பகம்.

இதுவரை ஒன்றுமே தோன்றாமல் பிரமித்துப்போய் உட்கார்ந்திருந்த மதுரம், குழந்தையுடன் சண்பகம் வெளியே போனதும் தன் கணவரை நிமிர்ந்து பார்த்தாள். வேதனையினால் மின்னிய அவள் விழிகளில் கண்ணீர் ததும்பிக் கன்னங்களில் வழிந்தது.

“போ அசடு! இதற்கெல்லாம் என்ன அழுகை?” என்று அவளைச் சமாதானப் படுத்தும் உத்தேசத்துடன் கூறிக்கொண்டே துண்டை உதறித் தோளின்மேல் போட்டுக் கொண்டு எழுந்தார் சபேசய்யர். ஆனால் சண்பகத்தின் வார்த்தை சபேசய்யருடைய மனதை எவ்வளவு தூரம் பாதித்து விட்டன என்பது அவருடைய வாடிய முகத்திலிருந்து நன்றாகத் தெரிந்தது.

சற்றுப் பொறுத்துத் தரையில் இறைந்து கிடந்த பட்சணங்களையெல்லாம் வாரித் தட்டில் போட்டு உள்ளே கொண்டுபோய் வைத்தாள் மதுரம். பாறைபோல் கனத்த அவள் ஹிருதயத்தின் துயரம் கண்ணீர் வெள்ளமாக வெடித்துப் புரண்டது. அப்படியே சமையலறை மூலையில் உட்கார்ந்து விம்மி விம்மி யழுதாள்.

நேரம் போய்க் கொண்டே யிருந்தது. சபேசய்யர் மூன்று மணிக்கு மேல் கடைக்குப் போய்விட்டார்.

விளக்கு வைக்கும் தருவாயில் புஷ்பம் வாங்குவதற்காக வாசலுக்கு வந்த மதுரம், எதிர்வீட்டு முகப்பில் நடுவீட்டு நாகுப் பாட்டியுடன் பேசிக் கொண்டிருந்த சண்பகத்தைக் கண்டாள்.

மதுரத்தைக் கண்டவுடன் சண்பகம் உரத்த குரலில், “என்ன பாட்டி? எல்லாம் அவரவர் தொழிலைப்போல்தானே குணமும் இருக்கும்? கரண்டி பிடித்து ஓட்டல் வைத்துக் கொழுக்கும் பணம்தானே! படித்துப் பட்டம் வாங்கி சர்க்கார் வேலை பார்ப்பவர்களது புத்தி வருமா?—எங்கள் வீட்டுக் குழந்தை வயிற்றிலே அவர்கள் ஹோட்டலிலே பண்ணின ஊசைப் பட்சணங்களையெல்லாம் வைத்து அடைத்தால் அதனுடைய உடம்பு என்னத்துக்காகும்?—‘இனிமேல் அவர்கள் வீட்டுப் படியிலே காலை வைத்தால் முறித்துப்போட்டு விடுவேன்!’ என்று



*போட்டோக்காரர்:*—என்ன ஐயா இது? வேஷ்டியைத் தூக்கி மடித்துக் கட்டிக்கொண்டு போட்டோவுக்கு நிற்கிறீரே!

*மீசைக்காரர்:*—என்ன ஸார் அப்படிச் சொல்லி விட்டீர்கள்? பதினைந்து ரூபாய்க்கு பூட்ஸும் மூன்று ரூபாய்க்கு ஸாக்ஸும் வாங்கிப் போட்டுக் கொண்டிருக்கிறேன். அதெல்லாம் படத்திலே நன்றாய்த் தெரிய வேண்டாமா?

"அவர் இன்றைக்குக் குழந்தையைக் கண்டித்து வைத்திருக்கிறார்!" என்று மேலும் மேலும் ஏதேதோ பேசிக் கொண்டே போனான். அவனுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டேயிருந்த மதுரத்தின் நெஞ்சம் துக்கத்தினால் பிளந்து விடும்போல் ஆகி விட்டது. புஷ்பத்தைக் கையில் எடுத்துக் கொண்டு கண்ணீர் பார்வையை மறைக்க வேகமாய் உள்ளே போனவள், அப்படியே ஊஞ்சல் பலகையில் படுத்து மீண்டும் விம்மி விம்மி அழலானாள்.



*சாஸ்திரியார்:* — நம்ப கல்யாணத்தைப் பற்றிக் கொஞ்சம் கவனிக்கக் கூடாதா?

*கோட்டுக்காரர்:* — என்ன சாஸ்திரியாரே! உமக்கு வயசு ஐம்பது இருக்கும் போலிருக்கிறதே! இனிமேல் கல்யாணமாவது!

*சாஸ்திரியார்:* — அடேடே, என் கல்யாணத்தைப் பற்றிச் சொல்லவில்லை ஸார்! என் பிள்ளையாண்டான் கல்யாணராமனுக்கு ஒரு வேலை போட்டுத் தரக்கூடாதா என்று கேட்டேன்.

• • •

**ம**துரத்தின் கணவர் சபேசய்யரும் சண்பகத்தின் கணவர் மகாதேவய்யரும் நெருங்கிய சிநேகிதர்கள். சபேசய்யர் ஹோட்டல் வைத்து அளவற்ற பணம் சேர்த்து விட்டார். மதுரத்தின் உடம்பில் பொன்னும் வைரமுமாகச் சுடர் வீசலாயிற்று. மகாதேவய்யர் தபாலாபீஸில் குமாஸ்தாவாக இருந்தார். மாதம் எழுபது ரூபாய் சம்பளம். சண்பகமும் அதற்கேற்றாற்போல் அன்று கண்ட மேனிக்கு அழிவில்லாமலே இருந்து வந்தாள்.

நாலைந்து வருஷங்களில் சண்பகத்துக்குச் சிவராஜன் பிறந்தான். மதுரத்துக்குக் குழந்தையே பிறக்கவில்லை. ஆனால் பேதை மதுரம் என்றும் போலவே சண்பகத்தினிடம் பிரியமாக இருந்தாள். குழந்தையிடம் அவளுக்கும் அவள் கணவருக்கும் அளவற்ற பாசம். அநேகமாக அவர்கள் வீட்டிலேயே வளர்ந்து வந்தான் சிவராஜன்.

மதுரத்துக்குப் பணம் மேலும் மேலும் பெருகுவது சண்பகலக்ஷ்மிக்குப் பொறாமையை யுண்டாக்கவே, நாளடைவில் அவள் நடத்தையும் மாறுபடலாயிற்று. ஹோட்டல் காரனின் மனைவி யென்றும், பிள்ளையில்லா மலடி யென்றும் ஜாடைமாடையாக அவள் மதுரத்தைப் பற்றி ஏளனமாகப் பேசுவாள். சிலசமயம் குழந்தையையும் அவர்கள் வீட்டுக்குப் போகக்கூடாதெனத் தடையுத்தரவு போட்டு விடுவாள். ஆனால் அவளுக்குத் தெரியாமல் குழந்தை 'பெரியம்மா வீட்டு'க்கு ஓடிவந்து விடுவான். அப்பொழுதெல்லாம் அவனுக்குப் பட்சணம் கொடுத்து அலங்காரம் செய்து மகிழ்வாள் மதுரம்.

## 3

**ம**றுநாள் ராத்திரி ஒரு மணியிருக்கும். அதுவரையில் நித்திரை பிடியாமல் புரண்டு கொண்டிருந்த மதுரம் அப்பொழுதுதான் சற்றுக் கண்ணயர்ந்தாள். சபேசய்யருக்கு நல்ல தூக்கம். கூடத்தில் விடிவிளக்கு எரிந்து கொண்டிருந்தது. படபடவென்று வாசல் கதவை யாரோ இடித்தார்கள். அதைத் தொடர்ந்து, "சபேசா! சபேசா! சீக்கிரம் கதவைத் திற!" என்று மகாதேவய்யரின் குரல் கேட்டது.

வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தாள் மதுரம். பரபரப்புடன் தன் கணவரைப் பிடித்துக் குலுக்க "சீக்கிரம் எழுந்திருங்கள்! மகாதேவய்யர் கூப்பிடுகிறார்!" என்றாள்.

கதவை திறந்து பார்த்ததும் மகாதேவய்யரின் முகம் பேயறைந்தது போலிருந்தது. "சபேசா! சீக்கிரம் வா! குழந்தைக்கு என்னவோ தெரியவில்லை; ஜுரம் நெருப்பாகக் காய்கிறது! மூச்சு விட முடியாமல் தவிக்கிறான்; மதுரத்தையும் அழைத்துக் கொண்டு வா!" என்று சொல்லிக் கலவரத்துடன் கையைப் பிசைந்தார்.

இந்த வார்த்தை காதில் விழுந்ததோ இல்லையோ, "நீங்கள் கதவைப் பூட்டிக் கொண்டு வாருங்கள்! நான் முன்னால் போகிறேன்!" என்று கூறியபடி அவருடைய பதிலை எதிர்பாராமல் இரண்டே எட்டில் எதிர்வீட்டு வாசலை யடைந்து உள்ளே நுழைந்துவிட்டாள் மதுரம்.

கட்டிலின் மேல் உட்கார்ந்தபடி குழந்தையை மடியில் வைத்துக் கொண்டிருந்தாள் சண்பகம். அவள் கண்கள் அழுகையினால் சிவந்து இடுங்கியிருந்தன. குழந்தைக்குத் தன்னுடைய நினைவேயில்லை. வாயில் வந்த




"அண்ணே! நாம்ப வீட்டுக்குள்ளே போய் ஐயாவைப் பார்க்கலாமா, வேண்டாமா?"

"வாணாம்பா! உள்ளே போனும் ஐயா கோவிச்சுக்கிட்டு நம்ம மேலே வள்ளுன்னு விழுந்தாராலும் என்ன செய்யறது?"

---

படியெல்லாம் தன் மழலைச் சொற்களால் அவன் பிதற்றிக் கொண்டிருந்தான்.

"பெய்யம்மா! அம்மா அடிச்சா!...... பட்சணம் வேணுமே!...கேக்குப் பெய்யம்மா வீட்டுக்குப் போகணுமே!" என்றெல்லாம் அவன் உளறிக்கொண்டிருந்தான்.

"அட என் கண்ணே!" என்று அவனை வாரி யெடுத்துத் தோளில் போட்டுக் கொண்டாள் மதுரம்.

"ஐயோ! மதுரம் அக்கா! நான் என்ன செய்வேன்?" என்று அழத் தொடங்கி விட்டாள் சண்பகலக்ஷ்மி.

"சண்பகம்! அழாதே அம்மா! குழந்தைக்கு ஒன்றும் கெடாது! கவலைப் படாதே!" என்று தனக்கு இயற்கையான பெருந்தன்மையுடன் கூறிவிட்டு அவனைப் படுக்கையில் கிடத்திப் போர்த்தி வைத்தாள் மதுரம்.

அதற்குள் அங்கே வந்த சபேசய்யர் குழந்தையின் நிலைமையைக் கண்டு உடனே டாக்டரை அழைத்துவர ஓடினார். டாக்டர் வந்து பார்த்துவிட்டு ஏதோ அதிர்ச்சியினால் வந்த ஜுரமென்றும் மூன்று நாட்கள் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டுமென்றும் கூறி மருந்து கொடுத்து விட்டுப் போனார்.

சபேசய்யரும் மதுரமும் அந்த மூன்று நாட்களும் குழந்தையை விட்டு அப்படி இப்படி நகராமல் அவன் பக்கத்திலேயே இருந்தார்கள்.

"தெரியாமல் செய்து விட்டேன் மதுரம் அக்கா! அன்றைக்குக் குழந்தையை ரொம்ப அடித்து விட்டேன்! அதனால்தான் ஜுரம் வந்துவிட்டது! — உங்களையும் மனம் நோகச் செய்து விட்டேன்! மகா பாவி நான்!" என்று அடிக்கடி பிரலாபித்துக் கண்ணீர் விட்டாள் சண்பகலக்ஷ்மி.

"போடி பைத்தியம்! அதெல்லாம் ஒன்று மில்லை; வருத்தப்படாதே!" என்று சமாதானப்படுத்தினாள் மதுரம்.

மூன்றாவது நாள் இரவு கண்ணை விழித்துப் பார்த்தான் குழந்தை.

"பெய்யம்மா!"

"அட, என் செல்லத் துரையே!" என்றுசொல்லி அவனை மார்போடு தழுவிக் கொண்டாள் மதுரம்.

"அம்மாதான் என்னை அடிச்சா!" என்றான் குழந்தை.

இதைக் கேட்டுக் கொண்டே உள்ளே வந்த சண்பகத்தின் கண்களில் நீர் பெருகி வழிந்தது.

"நான் போய்க் குழந்தைக்குக் கஞ்சி போட்டுக் கொண்டு வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே சண்பகத்தைக் கண்டதும் கட்டிலை விட்டு எழுந்தாள் மதுரம்.

"அம்மா அடிப்பா!" என்று மீண்டும் சிணுங்கினான் குழந்தை.

"இல்லையடா ராஜா! இனிமேல் அடிக்க மாட்டா!" என்றாள் மதுரம்.

"வேண்டாம், அக்கா! நீயே அவனை வைத்துக் கொள். நான் போய்க் கஞ்சி கொண்டு வருகிறேன்!" என்று சொல்லி விட்டுச் சென்றாள் சண்பகம்.

மதுரம் குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டு கட்டிலின் மேல் உட்கார்ந்தாள். சண்பகத்தின் மனம் அவ்வாறு மாறியது அவளுக்கு அளவற்ற ஆச்சரியத்தைக் கொடுத்தது.

* * *

"என்ன அக்கா! என்னவோபோல் நிற்கிறாயே?" என்று மதுரத்தின் தோளைப் பிடித்துக் உலுக்கினாள் சண்பகம்.

மதுரம் சட்டென்று திரும்பிப் பார்த்தாள். சற்றுத் தூரத்தில் ஊர்வலம் நகர்ந்து கொண்டிருந்தது.

"என்னவோ யோசித்துக் கொண்டே நின்று விட்டேன்!" என்று சிரித்துக் கொண்டே வேகமாக அவள் நடந்து சென்று ஊர்வலத்தில் கலந்துகொண்டாள்.

நாதஸ்வரக்காரன் அப்பொழுதுதான் மலய மாருதத்தை நிறுத்திவிட்டு ஹம்ஸத்வனி ராகத்தை வாசிக்கலானான்.

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 256. ஊரை விட்டே போகிறான் !

விபீஷணனைப் பார்த்து மேலும் சொல்லுகிறான் ராவணன் :

“முன்னமேயே அந்த எதிரிகள்பால் உனக்குச் சினேகிதம் பிறந்து முற்றி விட்டது. பகையான மனிதரிடத்தில் அன்பு வைத்துவிட்டாய். அவர்களை நினைந்து உன்னுடைய எலும்பு அட்டா, உருகுகிறதே !”

‘முன்புற அனையர்பால்
நன்பு முற்றினை,
வன்பகை மனிதரின்
வைத்த அன்பினை,
என்புற உருகுதி,
அழுதி ஏத்துதி,
உன்புகல் அவர்,பிறி(து)
உரைக்க வேண்டுமோ !’

[ஏத்துதி : வக்காலத்து வாங்கி அவர்களைப் புகழ்கிறாய் ; உன் புகல் அவர் : உன் ஆதரவிலேயே அவர்கள் இருக்கிறார்கள்.]

இப்படி ஏளனமாய்ப் பேசப் பேச ராவணனுக்கு ஆங்காரமே மேலும் மேலும் மூளுகிறது. உச்சத்தை அடைகிறது.

“தம்பியைக் கொன்றான் என்ற பழி எனக்கு வேண்டாம். அதனால்தான் இப்போது உன்னைக் கொல்லவில்லை.”

‘பழிப்பினை உணர்ந்துயான்
படுக்கி லேன்உனை,
ஒழிகிலை புகலுதல்,
ஒல்லை நீங்குதி,
வழியெதிர் நிற்றியேல்
விளிதி’ என்றனன்,
அழிவினை எய்துவான்
அறிவு நீங்கினான்.

[படுக்கிலேன் உனை : உன்னைக் கொல்லவில்லை ; ஒழிகிலை புகலுதல் : பேச்சை நீ நிறுத்துவதாக இல்லை ; ஒல்லை நீங்குதி : இந்த க்ஷணமே நீ எங்கேயாவது போய்த் தொலையவேண்டும் ; வழியெதிர் நிற்றியேல் விளிதி என்றனன் : என் கண் முன்னால் நின்றாயானால் நீ செத்தாய் என்று சொன்னான் ; அழிவினை எய்துவான் அறிவு நீங்கினான் : அதோ கதி அடையும்படியாகவே அறிவு கெட்ட நிலையில் இருந்த ராவணன்.]

* * *

“வெளியே போ !” என்று ராவணன் சொன்னதும் விபீஷணன், துணைவர் சிலருடன் எழுந்து வாசலை நோக்கி நடந்தான். வாசலை அடைந்ததும் யோசனை செய்தான். வாசலிலே நின்ற வண்ணமாய்த் தமையனைப் பார்த்துக் கடைசியாகப் பேசுகிறான்.

என்றலும் இளவலும்
எழுந்து வாயிடைச்
சென்றனன், துணைவரும்
தானும் ; சிந்தியா
நின்றனன், பின்னரும்
நீதி சான்றன
ஒன்றல பலபல
உறுதி ஓதினான்.

[என்றலும் இளவலும் எழுந்து : ராவணன் ‘வெளியே போ’ என்று சொன்னதும் தம்பியாகிய விபீஷணன் ஆசனத்தை விட்டெழுந்து ; வாயிடைச் சென்றனன் துணைவரும் தானும் : வாசலை நோக்கி நடந்தான்—துணைவருடனே ; சிந்தியா நின்றனன் : சிந்தித்த வண்ணமாய் அந்த வாசலிலேயே சிறிது நேரம் நின்றான் ; பின்னரும் நீதி சான்றன ஒன்றல பலபல : ஆத்திரத்தால் பின்னும் பேசினான்—நீதியால் உயர்ந்த உண்மைகளை, ஒன்றா ?—எத்தனை எத்தனையோ ; உறுதி : உண்மைகள்.]

விபீஷணன் தாங்க முடியாத வருத்தத்தோடும் ஆத்திரத்தோடும் சொல்லுகிறான்.

“அடாடா! இனி நடக்கப்போகும் காரியத்தை நினைத்துப் பார்த்தால் என் வயிறு எரிகிறதே!”

**‘புத்திரர், குருக்கள், நின்**
**பொருளில் கேண்மையர்,**
**மித்திரர், அடைந்துளோர்**
**மெலியர், வன்மையோர்,**
**இத்துணை பேரையும்**
**இராமன் வெஞ்சரம்**
**சித்திர வதைசெயக்**
**கண்டு நிற்றியோ?’**

[நின் பொருளில் கேண்மையர்: உன்னுடைய ஒப்பற்ற பந்துக்கள்; மித்திரர்: சினேகிதர்; அடைந்துளோர் மெலியர் வன்மையோர்: உன்னிடம் அடைக்கலம் புகுந்த சக்தி இல்லாதவர்கள், அவர்கள் போக அடைக்கலம் புகுந்த சக்தி வாய்ந்தவர்களுமே; ராமன் வெம்சரம்: ராமனுடைய கொடிய பாணங்கள்; சித்திரவதை செய: சின்னா பின்னப்படும்படி கொல்ல; கண்டு நிற்றியோ: அந்தக் காட்சியைக் காணுமல் நிற்பதுபோல் இருக்கிறதே உன்னுடைய லக்ஷியம்.]

குறிப்பு:— அடைக்கலமாய் வந்தவனுக்கு என்ன தீங்கும் நேரக்கூடாது என்ற பதட்டம் யாருக்கும் இருக்கும். சாமானியப்பட்டவன் அடைக்கலம் புகுந்தாலே அப்படியிருக்கும். அதிலும் அடைக்கலம் புகுந்தவன் பெரிய பதவியில் உள்ளவனாய், சக்தி வாய்ந்தவனாய் இருந்து விட்டால் எவ்வளவு பதட்டம் ஏற்படும்!

இதைக் குறித்தே ‘அடைந்துளோர் மெலியர், வன்மையோர்’ என்று முடித்திருக்கிறது.

***

விபீஷணன், மனம் இடிந்தவனாய் ஒரே ஆத்திரத்தோடு தான் சொல்ல வேண்டியதைப் பேசி முடிக்கிறான்:

**‘எத்துணை வகையினும்**
**உறுதி எய்தின,**
**ஒத்தன உணர்த்தினேன்,**
**உணர கிற்றிலை,**
**அத்த! என் பிழைபொறுத்(து)**
**அருளுதி யால்’ என,—**
**உத்தமன் அந்நகர்**
**ஒழியப் போயினான்.**

[எத்துணை வகையினும் உறுதி எய்தின: எந்த வகையில் பார்த்தாலும் உனக்கு நன்மையே தருவனவாய்; ஒத்தன: உன்னுடைய பதவிக்கு ஒத்தவைகளாய் உள்ள விஷயங்களை; உணர்த்தினேன் உணரகிற்றிலை: உனக்கு உன் மனதில் படும்படியாகவே என்னால் ஆனமட்டும் சொன்னேன். ஆனால் நீ உணர்வதாக இல்லை—இனிமேல் நானும் பேசுவதாக இல்லை; அத்த, என் பிழை பொறுத்து அருளுதியால் என: ‘என் அப்பனே! நான் சொன்னது பிழை என்று கருதினால் என் பிழையைப் பொறுத்தருள வேண்டும்’ என்று கடைசியாகச் சொல்லிவிட்டு; உத்தமன் அந்நகர் ஒழியப் போயினான்: உயர்ந்த பண்புடையவனான விபீஷணன் அந்த நகரத்தை விட்டு அகன்று போய் விட்டான்.]

விபீஷணனது வார்த்தைகளில் “ஐயோ! ராவணன் மாத்திரம் அல்ல, அரக்கர் குலமே அழிந்துவிடும்” என்ற ஆற்றாமையும் ஆத்திரமும் அபார வேகத்துடன் வருகின்றன.

---

## பேஷாய்ப் போச்சு!



வந்தவர்:— இந்த வீட்டிலே குடியிருக்க ஏதாவது ‘போர்ஷன்’ காலியிருக்கிறதோ?

வீட்டுக்காரர்:— இருக்கிறது; ஆனால் ஒன்று மாத்திரம் சொல்லி விடுகிறேன். மாடியில் குடியிருப்பவர் சதா பிடில் வாசித்துக் கொண்டிருப்பார். என் பிள்ளையும் எப்பொழுது பார்த்தாலும் மிருதங்கத்தை வைத்துக் கொண்டு காதைத் துளைத்து விடுவான். இஷ்டமிருந்தால் வந்து பாருங்கள்!

வந்தவர்:— பேஷாய்ப் போச்சு, ஸார்! நான் வாய்ப் பாட்டு வித்வான்!

# சரஸ்வதியின் சகோதரன்

அம்புஜு

இரவு சுமார் எட்டு மணி யிருக்கும். கிருஷ்ணமூர்த்தி தன் அறையில் மேஜையருகில் அமர்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்தான்.

"அண்ணா!" என்று அன்பு ததும்பக் கூப்பிட்டவாறே ஸரஸ்வதி அவன் அருகில் வந்து நின்றாள்.

"ஏன்?" என்றான் கிருஷ்ணமூர்த்தி.

"சுப்பிரமணிய அய்யர் வந்துவிட்டு இப்பொழுதுதான் போகிறார்" என்று கூறி ஸரஸ்வதி மேலே ஒன்றும் கூறாமல் தமயனின் முகத்தை ஆர்வத்துடன் பார்த்தாள்.

கிருஷ்ணமூர்த்தி "அதற்கென்ன இப்பொழுது?" என்றான் அலட்சியமாக.

"அதற்கொன்று மில்லை, அண்ணா! ஆனால்......" என்ற போதே ஸரஸ்வதியின் குரல் கம்மி வார்த்தைகள் வாயிலிருந்து வெளிவர மறுத்தன. கண்களில் கண்ணீர் துளித்தது.

இதைப் பார்த்த கிருஷ்ணமூர்த்தி திகைத்தான். "ஸரஸ்வதி! என்ன சங்கதி?" என்று பரிவுடன் கேட்டான்.

"அண்ணா! சற்று முன் சுப்பிரமணிய அய்யரும் அம்மாவும் பேசிக்கொண்டிருந்தது உனக்குத் தெரிந்திருக்கும். அம்மா அவரிடம் நீ இப்பொழுது கல்யாணம் பண்ணிக் கொள்ளமாட்டாய் என்று கண்டிப்பாகக் கூறிவிட்டாள். அண்ணா! நீ எனக்காகத் தானே ஹேமலதாவை உதறித் தள்ளுகிறாய்? அவள்பேரில் உனக்கு ஆசை இருப்பதென்னவோ உண்மை. அவள் பெற்றோரும் அவளை உனக்குக் கொடுத்துக் கல்யாணம் பண்ணச் சித்தமாக இருக்கிறார்கள். அப்படியிருக்கும் எனக்குக் கல்யாணம் ஆகவில்லை என்பதற்காக நீ இப்பொழுது பண்ணிக் கொள்ள மறுக்கிறாய். என் கல்யாணத் திற்கோ என் துர் அதிருஷ்டம் குறுக்கே நிற்கிறது. நம் அருமை ஹேமலதாவுக்கும் என் துர்ப்பாக்கியத்தின் பயனாக இப்பொழுது இக்கதி நேர்ந்திருக்கிறது. இதை என்னால் பொறுக்க முடியாது அண்ணா! உன் சந்தோஷத்தைக் கெடுத்து, உன் பொன்னான வாழ்வைப் பாழ்படுத்தவா நான் உன் கூடப் பிறந்தேன்? அண்ணா! தயவு செய்து உன் எண்ணத்தை மாற்றிக்கொண்டு 'சரி' என்று அவர்களுக்குச் சொல்லி விடு. எனக்காக ஹேமலதாவின் வாழ்க்கையையும் பாழாக்காதே!" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

கிருஷ்ணமூர்த்தி, "பூ! இதற்குத்தானா? என்னவோ என்றல்லவா நினைத்தேன்; ஹேமலதாவிடம் உனக்கு இவ்வளவு அநுதாபம் உண்டென்று தெரிந்திருந்தால் முன்பே வேறு ஏற்பாடு செய்திருப்பேனே! இப்பொழுது என்ன செய்கிறது? ஹேமலதாவின் வாழ்க்கையைச் சிறப்பிக்க யாராவது ஒரு உத்தமன் வந்துவிட்டுப்போகிறான். அதற்காக நீ வருத்தப் படாதே!" என்றுகூறி அவளைச் சமாதானப் படுத்தி விட்டு "அம்மா, அம்மா! இங்கே வந்து பார், உன்பெண்ணை! எதற்காகவோ பிரமாதமாக அழுதுகொண்டிருக்கிறாள். என்னவென்று விசாரி!" என்று உரக்கக் கூப்பிட்டான்.

உடனே அங்கே வந்த லக்ஷ்மி யம்மாள் "எல்லாம் நீ அடிக்கிற கூத்துத்தானடா! அவள் பேரில் என்ன குற்றமிருக்கிறது? 'ஹேமலதா, ஹேமலதா!' என்று அந்தப் பெண்ணைச் சுற்றிக்கொண்டிருந்தாய். இப்பொழுது அவர்கள் கல்யாணத்துக்கு அவசரப் படும்போது இவளுக்குக் கல்யாணமாகவில்லையென்கிற சாக்கை வைத்துக்கொண்டு நீ கல்யாணம் பண்ணிக் கொள்ளமாட்டேன் என்கிறாய். "இதைவிட மனோவியாகூலத்துக்கு வேறென்னவேண்டும்! இதோ பார், கிருஷ்ணமூர்த்தி! நீ செய்கிற காரியம் நன்றாக இல்லை. பேசாமல் ஹேமலதாவைக் கல்யாணம் பண்ணிக்கொள். அதனால் ஒன்றும் தரும நியாயத்துக்குப் பங்கம் வந்து விடாது. ஊரில் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணின பிறகு தான் பிள்ளைக்குப் பண்ண வேண்டும் என்கிற நியாயம் பொதுவாக இருந்தாலும் மாற்றி நடத்தினால் ஒன்றும் முழுகிப் போய்விடாது. எத்தனையோ இடங்களில் இத்தமாதிரி நடந்திருக்கிறது. ஹேமலதா நல்லபெண், அவர்கள் ரொம்ப நல்ல

மனிதர்கள். இதை இழந்துவிட்டுப் பிறகு கஷ்டப்படவேண்டி யிருக்கும். நன்றாக யோசனை செய்து பார்!'' என்று சமயத்தைக் கைவிடாமல் தன் அபிப்பிராயத்தைக் கூறினாள்.

இதைக் கேட்டவுடன் கிருஷ்ணமூர்த்திக்குப் பிரமாதமான கோபம் வந்துவிட்டது. ''அம்மா! நீ தயவுசெய்து சும்மாயிரு; இல்லாவிட்டால் எனக்குக் கோபம் வரும். வயது வந்த தங்கையை வீட்டில் வைத்துக் கொண்டு நான் கல்யாணம் பண்ணிக்கொண்டு சுகமாக வாழ்கிறது! நன்றாக இருக்கிறது உன் புத்திமதி! ஒரு நாளும் நான் அதன்படி நடக்கமாட்டேன்.'' என்று கண்டிப்பாகக் கூறினான்.

''நீ எப்படியாவது போ!'' என்று கூறிவிட்டு லக்ஷ்மி யம்மாள் அங்கிருந்துசென்றாள்.

2

கணபதி அய்யர் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர். லக்ஷ்மி அவர் மனைவி. கிருஷ்ணமூர்த்தி சரஸ்வதி என்று இரண்டு குழந்தைகளைப் பெற்று அவர்கள் அமோகமாக வாழ்ந்து வந்தார்கள். குழந்தைகள் பெரியவர்களாகிப் படித்துக் கொண்டிருந்தார்கள். கிருஷ்ணமூர்த்தி காலேஜிலும் சரஸ்வதி ஹைஸ்கூலிலும் படித்துக் கொண்டிருந்தார்கள். திடீரென்று ஒருநாள் அந்த நல்ல குடும்பத்தைத் துரதிருஷ்டம் முற்றுகையிட்டது. கணநேரத்தில் மாரடைப்பால் கணபதி அய்யர் காலமானார். செல்வக் குழந்தைகளான கிருஷ்ணமூர்த்தியும் சரஸ்வதியும் வாசற்படி யறியாத லக்ஷ்மியம்மாளும் துயரக் கடலில் மூழ்கினர்! நாட்கள் பறந்தன. கிருஷ்ணமூர்த்தி படிப்பை முடித்துக் கொண்டு ஒரு கம்பெனியில் உத்தியோகத்திலமர்ந்தான். சரஸ்வதி கல்யாணத்துக்கிருந்தாள்.

சரஸ்வதியின் கல்யாணத்துக்கு வரன் தேடுவதில் லக்ஷ்மியம்மாளின் சொந்தக்காரர்கள் சிநேகிதர்கள் எல்லோரும் உதவி புரிந்தார்கள். ஜாதகங்கள் வந்து குவிந்து கொண்டிருந்தன. இதன் நடுவில் கிருஷ்ணமூர்த்திக்கும் ஜாதகம் வரத்தொடங்கியது. அதில் ஜா பர்துவும் லக்ஷ்மியம்மாளின் கணவன் ஜீவியவந்தரா யிருந்த காலம் முதற்கொண்டே அறிமுகமான போலீஸ் இன்ஸ்பெக்டர் சுப்பிரமணிய அய்யர் தம் பெண் ஹேமலதாவைக் கிருஷ்ணமூர்த்திக்குக் கொடுத்துக் கல்யாணம் பண்ணச் சித்தமாக இருந்தார். சிறு வயது முதற்கொண்டே நெருங்கிப் பழகியதால் கிருஷ்ணமூர்த்திக்கும் ஹேமலதாவுக்கு மிடையே அன்பு வளர்ந்துவந்தது என்பது யாவரும் அறிந்த விஷயம். முதலில் சரஸ்வதிக்குக் கல்யாணம் நடத்திவிட்டுப் பிறகு ஹேமலதாவுக்குச் செய்வது என்றுதான் எல்லோரும் முடிவு செய்திருந்தார்கள். ஆனால் சரஸ்வதிக்கோ வரன் அவ்வளவு சுலபமாகக் கிடைக்கவில்லை. வருஷா வருஷம் வரன் சரியாகக் கிடைக்காமல் கல்யாணம் ஒத்திப் போய்க் கொண்டிருந்தது.

சுப்பிரமணிய அய்யரின் தாயார் தொண்டு கிழவியாக இருந்தாள். அவளுக்குத் தன் அந்திய காலத்தில் ஒரே ஒரு ஆசைதான் இருந்தது. அதாவது தன் அருமைப் பேத்தி ஹேமலதாவுக்குக் கல்யாணம் பண்ணிப் பார்த்துவிட வேண்டுமென்பது. சதா தன் பிள்ளையிடத்தில் இதைப் பற்றி நச்சரித்துக் கொண்டிருந்தாள். சுப்பிரமணிய அய்யருக்குத் தன் மகளைக் கிருஷ்ணமூர்த்தியைத் தவிர வேறு யாருக்கும் கொடுக்க மனமில்லை. அவனோ தங்கைக்குக் கல்யாணம் ஆன பிறகுதான் தான் பண்ணிக்கொள்ளுவேனென்று பிடிவாதம் பிடித்தான். 'சரஸ்வதிக்கு எப்பொழுது வரன் கிடைக்கிறது? ஹேமலதாவுக்கு எப்பொழுது கல்யாணம் நடக்கிறது? இதற்குள் தன் கிடைத்தற்கரிய தாய் காலமாகிவிட்டாலும் விடலாம்' என்று மனம் சோர்ந்துபோன சுப்பிரமணிய



அய்யர், முதலில் ஹேமலதாவுக்குக் கல்யாணத்தை முடித்துவிடலாம் என்று கிருஷ்ணமூர்த்தியையும் அவன் தாயாரையும் வற்புறுத்தினர். ஆனால் அவர்கள் சம்மதிக்கவில்லை. பிறகு அவர் தம் பெண்ணுக்கு வேறு வரன் தேடத் தொடங்கி விட்டார்.

இதையெல்லாம் பார்த்த சரஸ்வதிக்குச் சொல்ல முடியாத வருத்தமாக இருந்தது. தனக்காகத் தன் சகோதரன் கஷ்டப்படவேண்டும் என்று எண்ணி இதற்கு ஏதாவது உபாயம் உண்டா என்று சிந்திக்கலானாள். கடைசியில் அவளுக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

அவர்கள் சொந்தக் கிராமத்தில் அத்தை ஒருத்தி யிருந்தாள். அவளுக்கு ஐந்தாறு குழந்தைகள் உண்டு. மூத்தவன் ராஜாமணி. ராஜாமணியும் கிருஷ்ணமூர்த்தியும் ஏறக்குறைய ஒரே வயதினர். ஆனால் சிறு பிராய முதற்கொண்டே ராஜாமணி சரியாகப் படிக்காமல் தீய வழிகளிலேயே சென்றுகொண்டிருந்தான். அவனுக்குச் சரஸ்வதியைக் கொடுக்கும் யோசனையே யாருக்கும் இல்லை. அப்படியிருந்தும் சரஸ்வதி அவனை மணந்துகொண்டு தமையனுக்கு ஏற்பட்டிருக்கும் தடையை நீக்கிவிடுவது என்று தீர்மானித்தாள். இந்த அபிப்பிராயத்தை ஒரு நாள் தன் தாயாரிடத்தில் வெளியிட்டாள். "வரன் வரன் என்று வீணாக அலைந்து கொண்டிருக்க வேண்டாம், அம்மா! பேசாமல் ராஜாமணிக்கே என்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்து விடு. அவனைப் பண்ணிக்கொள்ள எனக்குப் பூரணச் சம்மதம்" என்றாள்.

லக்ஷ்மிக்குத் தூக்கி வாரிப்போட்டது. "ராஜாமணிக்கு உன்னைக் கொடுப்பதாக இருந்தால் எப்பொழுதோ கொடுத்திருப்பேனே! கல்யாணம் நடந்து நாலைந்து வருஷங்களாகி யிருக்குமே! இப்பொழுது அவன் எந்த விதத்தில் உயர்ந்துவிட்டான்? படிப்பிலா, குணத்திலா? ஒன்றையும் காணோம். போன வாரத்தில் கூட அவனைப் பற்றி அவதூறான செய்தி வந்ததே!" என்றாள் லக்ஷ்மியம்மாள்.

"அதையெல்லாம் நீ பார்க்க வேண்டாம் அம்மா. பேசாமல் அத்தைக்குக் கடிதாசு எழுதிப் போட்டுவிடு! இல்லாவிட்டால் இதற்கு விமோசனமே கிடையாது" என்று அழுத்தமாகக் கூறினாள். சரஸ்வதியின் மனதிலிருப்பதை ஒருவாறு அறிந்து கொண்ட அவள் தாயார் ஒன்றும் கூறாமல் மௌனம் சாதித்தாள். அவள் மனம் கவலையில் மூழ்கிற்று.

நாட்கள் செல்லச் செல்ல லக்ஷ்மியம்மாளின் மனதிலும் அதே யோசனை தோன்றிற்று. ஒருநாள் கிருஷ்ணமூர்த்தியிடம் விஷயத்தைக் கூறி அத்தைக்குக் கடிதம் எழுதும்படி கேட்டுக் கொண்டாள். இதைக் கேட்டவுடன் கிருஷ்ணமூர்த்திக்குக் கோபம் கரைகடந்து போயிற்று. "எனக்கு ஒன்றும் தெரியாது. உங்கள் இஷ்டம் போல் செய்து கொள்ளுங்கள்! உங்களுக்குப் புத்தி கெட்டுப் போய்விட்டது. ஆனால் ஒன்று. அந்த முட்டாள் மட்டும் இந்த வீட்டில் காலை வைத்தால் அவன் காலை ஒடித்துப் போட்டுவிடுவேன்!" என்று சீறிவிழுந்தான். லக்ஷ்மியம்மாளும் சரஸ்வதியும் பிரமித்துப் போய்விட்டார்கள். 'இதேதடா! இவன் எதற்கும் இணங்கமாட்டேன் என்கிறானே' என்று கவலைப்பட்டாள் லக்ஷ்மியம்மாள். 'இனி இந்த விஷயத்தை இவனிடம் பிரஸ்தாபிப்பதே தவறு. அவன் குழந்தையானதனால் விஷயத்தை விஸ்தாரமாக யோசிக்கும் புத்தி இன்னும் வரவில்லை. நாமே நம் காரியத்தை நடத்த வேண்டும்' என்று மனதிற்குள் தீர்மானித்தாள்.

## 3

கிருஷ்ணமூர்த்திக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. பத்திரிகையில் விளம்பரம் போடலாமா அல்லது யாருடைய தங்கையையாவது தான் கல்யாணம் பண்ணிக் கொண்டு பதிலுக்குச் சரஸ்வதியைக் கொடுக்கலாமா? என்று பலவிதமான யோசனையிலாழ்ந்தான். ஹேமலதாவை நினைத்த போது தங்கைக்காகத் தான் அவ்வளவு பெரிய தியாகம் செய்ய முடியாது என்றும் அவனுக்குத் தோன்றிற்று.

இதன் நடுவில் லக்ஷ்மியம்மாள் ஊருக்குக் கடிதப் போக்கு வரவு நடத்தி சரஸ்வதியை ராஜாமணிக்குக் கொடுக்க ஏற்பாடு செய்து கொண்டிருந்தாள். கடைசியில் முடிவாக நேரில் பேசுவதற்கு ஊரிலிருந்து அத்தையும் அவள் புருஷனும் ராஜாமணியும் வந்து சேர்ந்தார்கள். வந்ததும் வராததுமாக ராஜாமணி கிருஷ்ணமூர்த்தியின் அறைக்கு வந்தான். அவன் சொல்லுவதற்கு முன்பே நாற்காலியை இழுத்து அவன் எதிரில் போட்டுக் கொண்டு உட்கார்ந்தான். அவனைப் பார்க்கக் கிருஷ்ணமூர்த்திக்குப் பற்றி எரிந்தது. அதற்குள் ராஜாமணி "என்னப்பா? நீ ரொம்பப் பெரிய மனுஷனாகப் போய் விட்டாயே! நம்மையெல்லாம் இப்பொழுது கவனிப்பதுகூடக் கிடையாது!

பாதகமில்லை. இனிமேலாவது கவனித்துக் கொள்வாயோ மாட்டாயோ? உன் தங்கையை நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன்!'' என்று திமிராகக் கூறினான்.

கிருஷ்ணமூர்த்திக்கு அவன் பேச்சு காரசாரமாக இருந்தது. ஆத்திரம் மிஞ்சி வந்தது. அதை எப்படியோ அடக்கிக் கொண்டு அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். இதைத் தூரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்த லக்ஷ்மியம்மாளுக்குப் போன பிராணன் திரும்பி வந்தது. எக்கச்சக்கமாக நடந்து கொள்ளாமல் கிருஷ்ணமூர்த்தி பவ்யமாக நடந்து கொண்டது அவளுக்குச் சந்தோஷத்தை யளித்தது.

மட்டமான வரனானாலும் கிட்டமுட்டப் போன பொழுது வரதக்ஷிணையும் சீரும் பிரமாதமாகக் கேட்டார்கள். வேறு வழியில்லாமல் லக்ஷ்மியம்மாள் சாத்தனூர் விருப்பப்படியே எல்லாம் செய்ய ஒப்புக் கொண்டாள். சரஸ்வதியோ எப்படியாவது ஹேமலதாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகுமுன் தனக்குக் கல்யாணம் நடந்து விட்டால் போதும். பிறகு அண்ணா அவளை மணந்து கொண்டு விடுவான் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்தாள். அவள் விருப்பப்படியே எல்லாம் நடந்து ஒரு வெள்ளிக்கிழமை நிச்சயதாம்பூலம் நடத்தவும் ஏற்பாடாயிற்று.

நிச்சயதார்த்தத்துக்கு முதல்நாள் சாயந்திரம் லக்ஷ்மியம்மாள் தன் பிள்ளையிடம் "அப்பா, கிருஷ்ணமூர்த்தி! காலை விசேஷத்துக்குக் கடைக்குப் போய்க் கொஞ்சம் புஷ்பமும் பழமும் வாங்கிக் கொண்டு அப்படியே முக்கியமானவர்களையும் அழைத்து விட்டு வந்து விடு!'' என்று உத்தரவிட்டாள்.

"அப்படியே செய்கிறேன், அம்மா!'' என்று மிகவும் பணிவாகக் கூறின கிருஷ்ணமூர்த்தியின் கண்கள் கலங்கினதை லக்ஷ்மியம்மாள் பார்க்காமலில்லை.

சற்று நேரத்திற்கெல்லாம் கிருஷ்ணமூர்த்தியும் இன்னொரு சுமங்கலியுமாக ஊரழைக்கப் புறப்பட்டார்கள். பிறகு போக வேண்டிய இடங்களுக்கெல்லாம் போய் விட்டுக் கடைசியில் சுப்பிரமணிய அய்யர் வீட்டை நோக்கி வந்தார்கள். அப்பொழுது மணி ஏழடித்து விட்டது. சுப்பிரமணிய அய்யர் எங்கேயோ வெளியில் போயிருந்தார். அன்று கடைசியாக அவர் லக்ஷ்மியம்மாளிடம் பேசி விட்டுப் போனவர் திரும்பி கிருஷ்ணமூர்த்தியின் வீட்டுக்கு வரவேயில்லை. மாதம் இரண்டாகி விட்டது.

## குடையும் செருப்பும்












வாசற்படி ஏறுமுன்பே சுப்பிரமணிய அய்யர் சம்சாரம் வந்து "வா அப்பா, கிருஷ்ணமூர்த்தி! என்ன இந்தப் பக்கம் தலையே காட்டமாட்டேன் என்கிறாயே! எங்கள் பெண்ணை நீ கல்யாணம் பண்ணிக் கொள்ளாவிட்டால்தான் என்ன? அதற்காக வீட்டுக்கே வரக்கூடாதா?" என்று அன்புடன் கடிந்து கொண்டாள்.

"வருவதற்கு அவகாசமில்லை, மாமி! மாமா எங்கே?" என்றான் கிருஷ்ணமூர்த்தி.

இப்பொழுதுதான் எங்கேயோ போனார். வரநேரம் செல்லும். ஆமாம் நீ வந்திருக்கிறதைப் பார்த்தால் வீட்டில் ஏதோ விசேஷம் போலத் தோன்றுகிறதே! அப்படித்தானா?" என்று கேட்டாள் சுப்பிரமணியய்யர் மனைவி.

"ஆமாம்! சரஸ்வதிக்கு நாளைக்காலை பத்து மணிக்கு நிச்சயதார்த்தம் நடக்கிறது. உங்களையெல்லாம் தவறாமல் வரும்படி அம்மா சொல்லச் சொன்னாள். அவசியம் வரவேண்டும்!" என்று வெகு அழகாகக் கல்யாணத்திற்கு அழைப்பதுபோல் அழைத்தான் கிருஷ்ணமூர்த்தி.

"அவசியம் வருகிறேன். மாமாவிடத்திலும் சொல்லுகிறேன்! இங்கேயும் ஹேமலதாவுக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டது! வருகிற வெள்ளிக்கிழமை நிச்சயதார்த்தம்!" என்று ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டாள் அந்த மாது சிரோமணி.

"என்ன ஹேமலதாவுக்கா?" என்று ஆர்வம் பொங்கக் கேட்ட கிருஷ்ணமூர்த்தியின் மனதில் ஒரு கணத்தில் பல்லாயிரம் எண்ணங்கள் எழுந்து மறைந்தன. மின்னல் வேகத்தில் ஆசை—நிராசை இரண்டுக்கும் கடுமையான போர் மூண்டது. என்ன? சரஸ்வதியை ராஜாமணிக்குக் கொடுக்கப் போகும் செய்தி யறிந்து ஹேமலதாவுக்கும் தனக்கும் உடனடியாகக் கல்யாணத்தை நடத்திவிட இவர்கள் ஏற்பாடு செய்து விட்டார்களா? இதுவும் அம்மாவின் ஏற்பாடாக இருக்குமா? எல்லாம் நமக்குத் தெரியாமல் நடக்கிறதா, என்று எண்ணினான். அதற்கு சேர்மானமான எண்ணம் எழுந்தபோது அதை விரும்பாமல் மனதை வேறு வழியில் செலுத்தினான். "நாழியாகிறது மாமி, போய்வருகிறேன்!" என்று சொன்னான்.

"ஆகா, போய்விட்டு வா அப்பா! சரஸ்வதியைக் கடைசியில் அத்தானுக்கே கொடுக்கிறதாகக் கேள்விப்பட்டேன். சுலபமாகப் போய் விட்டது. இங்கே ஹேமலதாவுக்கு வரன் தேடிப் பிடிக்க மாமா எவ்வளவு கஷ்டப் பட்டு விட்டார், தெரியுமா? உன்னை நம்பிக் கொண்டு பேசாமலிருந்து விட்டார். பிறகு பெரிய கஷ்டத்தில் வந்து சேர்ந்தது. ஆனால் வரன் பேஷான வரன். பிள்ளை பெரிய பெரிய பரீட்சை யெல்லாம் கொடுத்திருக்கிறான். டில்லி சர்க்காரில் உத்தியோகத்திலிருக்கிறான். பெயர் ராமகிருஷ்ணன்" என்று பெருமிதமாகக் கூறி முடித்தாள் அந்த அம்மணி.

அந்த அம்மாள் கூறின கடைசி வார்த்தை கிருஷ்ணமூர்த்தியின் தலையைக் 'கிர்'ரென்று சுழலச் செய்தது. ஒரு நிமிஷம் அசைவற்று நின்று விட்டுப் பிறகு நடையைக் கட்டினான் அவன். ராமகிருஷ்ணன் கிருஷ்ணமூர்த்தியுடன் காலேஜில் படித்தவன். அவனைக் கிருஷ்ணமூர்த்திக்கு நன்றாகத் தெரியும்.

## 4

அன்றிரவு கிருஷ்ணமூர்த்தியின் உடம்பு திடீரென்று ஜுரம் கண்டது.

கிருஷ்ணமூர்த்தியின் நிலைமைக்குக் காரணம் அவன் மணக்கவிருந்த ஹேமலதாவை மணந்துகொள்ள முடியாமற் போய் விட்டது தான் என்று சொல்லத் தேவை இல்லை. ஆனால் அதுவல்ல முக்கிய காரணம். தன் அருமைச் சகோதரிக்கு ஒரு நல்ல வரன் பார்க்கத் தனக்குக் கையால் ஆகாமல் போய் விட்டதே என்று நினைக்குந்தோறும் அவன் இளம் உள்ளம் துடித்தது. அவன் ஹேமலதாவைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியாது என்று சொன்னதும் அவனைவிடப் பன்மடங்கு சிறந்த வரனைப் பார்த்து விட்டார் சுப்பிரமணியய்யர். ஆனால் அவன் இப்பொழுது செய்யும் காரியம் என்ன? அவன் தகப்பனார் இப்பொழுது உயிரோடிருந்தால் இப்படிப்பட்ட துர்ப்பாக்கியம் அவனுக்கும் அவனுடைய அருமைச் சகோதரிக்கும் ஏற்பட்டிராதல்லவா? இதை நினைக்க அவனுக்கு இரவு தூக்கமென்பதே இல்லாமல் கழிந்தது.

மறுநாள் வெள்ளிக்கிழமை. காலையில் நிச்சயதார்த்தம். பத்து மணிக்கெல்லாம் நடக்கப்போகும் முகூர்த்தத்துக்கு அதிகாலையிலிருந்தே எவ்வளவோ காரியங்கள் சுறுசுறுப்பாக நடந்து கொண்டிருந்தன. சுற்றுப் பக்கங்களில் வசித்த நண்பர் உறவினர்கள் எல்லோரும் வந்து கூடி விட்டார்கள். வந்தவரை உபசரிப்பதில் ஈடுபட்டிருந்தாள் லக்ஷ்மியம்மாள். இடை இடையே

கிருஷ்ணமூர்த்தியைப் பற்றியும் அவளுக்குக் கவலையாக இருந்தது.

சரஸ்வதியோ லவலேசமும் வருத்த மென்பதே இல்லாமல் நன்றாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டு வந்தவர்களுடன் பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டு மிருந்தாள்.

குறித்த நேரம் வந்தது. மகளையும் மகனை யும் மனையில் உட்கார வைத்துச் சடங்கு செய்ய வேண்டியிருந்தது. இதை நடத்தி வைக்க வந்திருந்த சாஸ்திரியார் உடனே சென்று 'மாப்பிள்ளை வரட்டும்' என்றார். உடனே ராஜாமணி தடபுடலாக சரிகை ஆடைகளையும் மோதிரம் முதலிய நகைகளையும் அணிந்து கொண்டு வாசனைத் திரவியங்களை வாரிப் பூசிக்கொண்டு தயா ராக இருந்தவன் மைனர் பார்ட்டை நடிக்க வரும் வேஷதாரி போல் கூடத் திற்கு வந்து மனையில் அமர்ந்தான். பிறகு "பெண் வரலாம்! பெண் வரலாம்!" என்று சாஸ்திரியார் உரக்கக் கூப்பிடவும் சரஸ்வதி சர்வாலங்கார பூஷிதையாகக் காண்போர் மனம் கவர வந்துகொண்டிருந்தாள். உள்ளம் சோர்ந்து உடல் சோர்ந்து ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த கிருஷ்ணமூர்த்தி சரஸ்வதி வருவதைப் பார்த்தான். உடனே அவனை என்னவோ செய்தது. உடம்பிலிருந்த ரத்த மெல்லாம் தலைக்கேறுவதுபோலவும் மூளை குழம்புவது போலவும் ஒரு கணம் உணர்ந் தான். அவ்வளவுதான் தன்னை மறந்து இருந்த இடத்தை விட்டெழுந்து நேரே விர் ரென்று சரஸ்வதியை நோக்கிச் சென்றான். "சரஸ்வதி! வேண்டாம்! வேண்டாம்! நீ இங்கே வரவேண்டாம்! இந்த மூடனுக்குக் கொடுக்க ஒரு நாளும் சம்மதிக்க மாட் டேன்! இவன் என் தங்கைக்கு ஏற்ற வர னல்ல. என் தங்கைக்குக் கல்யாணம் ஆகா விட்டாலும் பாதகமில்லை!" என்று ஆவேசம் வந்தாற்போல் கத்தினான். சரஸ்வதி நின்ற இடத்தில் அப்படியே நின்றுவிட்டாள். எல்லோரும் இதைப் பார்த்து ஸ்தம்பித்துப் போய் விட்டார்கள். இடி இடித்து நின்றது போல் ஒரு பயங்கரமான சூழ்நிலை ஏற் பட்டது.

எத்தனை நிமிஷம் அப்படியிருந்ததென்று சொல்ல முடியாது. பிறகு ஒருவிதமாக அமைதி நிலவியபோது எல்லோருடைய கண்களிலும் கண்ணீர் நிறைந்திருந்தது.

"அவனுக்கு இஷ்டமில்லாத காரியத்தை ஏன் செய்ய வேண்டும்? அப்படி என்ன அவசரம் இப்பொழுது வந்துவிட்டது!" என்று ஒருவரை யொருவர் கேட்டுக் கொண்டார்கள். கடைசியில் இன்ஸ்பெக்டர் சுப்பிரமணிய அய்யரே நிலைமையைச் சரிப் படுத்த முன்வர வேண்டியிருந்தது. பிள்ளை யின் தகப்பனாரைத் தனியாக அழைத்துக் கொண்டுபோய் அவர் காதில் ஏதையோ சொல்லித் தலையை ஆட்டுவித்தார். பிறகு லக்ஷ்மியம்மாளிடம் சென்று நெடுநேரம் ஏதோ பேசிவிட்டு வந்தார். அதன் பிறகு வெறி பிடித்திருந்த கிருஷ்ணமூர்த்தியிடம் சென்று "உன் இஷ்டத்துக்கு விரோதமாக இந்த நிச்சயதாம்பூலம் இனி நடக்காது. ஆனால் வந்திருப்பவர்களை உபசரித்து அனுப்ப வேண்டிய கடமை உன்னுடையது. என்ன சொல்லுகிறாய்?" என்று அதிகார மும் அன்பும் தொனிக்கும் குரலில் கூறினார்.

கிருஷ்ணமூர்த்தி தன் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ள வகை தெரியாமல் சாஷ்டாங்கமாக அவர் காலில் விழுந்து நமஸ்காரம் பண்ணினான். இதைப் பார்த்து எல்லோரும் கொல்லென்று நகைத்தார்கள்.

பிறகு வந்திருந்த உறவினர் நண்பர்கள் எல்லோரும் ஒருவிதத்தில் இல்லா விட்டா லும் இன்னொரு விதத்தில் சந்தோஷத் துடன் வீட்டுக்குத் திரும்பினார்கள். அதா வது அந்தச் சபையிலேயே ஹேமலதாவுக்கு நிச்சயித்திருந்த வரனுக்கு சரஸ்வதியைக் கொடுத்துவிட்டுப் பழைய ஏற்பாட்டின்படி கிருஷ்ணமூர்த்திக்கு ஹேமலதாவைக் கொடுப்பதென்று நிச்சயிக்கப்பட்டது.

## சரியாகிவிடும்!



அம்மாள்:—டாக்டர் ஸார், நாதன் தலைவலி தாங்காமல் துடிக்கிறது. அதைப் பார்க்க எனக்கு ரொம்ப ரொம்பக் கஷ்டமா யிருக்கிறது.

டாக்டர்:—அவருக்கு ஒரு தலைவலி மாத்திரை கொடுங்கள். நீங்கள் இரண்டு மாத்திரை சாப்பிடுங்கள்.

உங்கள் வதனத்தை

# மோகன எழிலோங்க

வைத்துக் கொள்ளுங்கள்... பாண்ட்ஸ்

## இரு க்ரீம்களின் சகாயத்தால்

உங்கள் வதனம் மோகன கவர்ச்சியுடன் விளங்க இருவித சௌந்தரிய பராமரிப்பு உங்களுக்குத் தேவை, இரவிலும் காலையிலும். இரவு, அரிய தைலங்களையுடைய ஊடுருவி உட்செல்லும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம், முகத்தை செம்மையாக சுத்தம் செய்யும். பகல்வேளை, மெல்லிய பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம், மேனியைக் கருக்கும் சூரியகிரணங்களினின்று முகத்தைக் காப்பாற்றும்.








உங்கள் இருவித சௌந்தரிய பராமரிப்பு:-

பிரதி இரவும், முகத்தில் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் தாராளமாகத் தடவி, அதன் செழுமையான தைலங்கள் மயிர்க்கண்களினுள் ஊடுருவிச் சென்று சூக்ஷ்ம மாசினைகளை வெளிப்படுத்தும்படி மெதுவாகத் தேயுங்கள் - துடைத்து நீக்கவும். இப்பொழுது பாருங்கள் உங்கள் முகம் மின்னும் வர்ணத்துடன் சோபை மிளிர்வதை! பிரதி காலையும் சூரியகிரணங்களினின்று காப்பதற்காக, முகத்தில் பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் லேசாகத் தடவுங்கள். அது உடனே ஒரு அதிருசிய படலமாகி, பகல் முழுதும் உங்கள் வதனத்தைப் பாதுகாக்கிறது.

# பாண்ட்ஸ்

வியாபார விவரங்களுக்கு: L. D. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிட்.

பம்பாய் - கல்கத்தா - டில்லி - சென்னை - நோவா கோவா - கராச்சி - கொழும்பு - ரங்கூன்

ஸ்டேஷன் போர்ட்டர்வரை ஒவ்வொருவரையும் பற்றி குற்றம் கூறப்படுவதைக் கேட்கிறோம். இதில் அதிகமாகப் பங்கெடுத்துக் கொள்பவர்கள் படித்தவர்கள் தான் — விஷயத்தை நன்கறிந்தவர்கள் தான்—எனக் கூறினால் மிகையாகாது. "ஏன் வண்டியில் இந்தச் சௌகரியம் இல்லை? அந்தச் சௌகரியம் இல்லை. இந்த எஸ். ஐ. ஆரே இப்படித்தான்" என்று அவர்கள் குறை கூறுகிறார்கள். இதனால் படித்தவர்கள் தங்களை அறியாமலே பெரும் தீங்கைச் செய்கிறார்கள். இவர்கள் பேச்சைக் கேட்கும் மற்ற பாமர மக்களின் மனதில் "என்ன பலன் கண்டோம் சுதந்திரம் பெற்று" "காங்கிரஸ் சர்க்கார் ரொம்ப மோசம்" என்ற மனப்பான்மை கொஞ்சம் கொஞ்சமாகத் தோன்றி வேரூன்ற ஆரம்பித்து விடுகிறது. சர்க்காரையும், அதன் காரியங்களைப் பற்றியும் ஓர் அலட்சியம் அவர்கள் மனதில் தோன்றுகிறது. இதை நன்கு பயன்படுத்திக்கொண்டு தங்கள் கட்சிக் கொள்கைகளைப் பரப்பக் கம்யூனிஸ்டுகள் போன்ற அநேக கட்சியினர் தயாராய் இருக்கின்றனர். இவ் விஷயங்களைப் படித்தவர்களும் நன்கு உணரவேண்டும்.

ஸைதாப்பேட்டை
31—5—49 கண்ணன்



## அலட்சியம் செய்யாதீர்கள்!

சமீபத்தில் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் நான் பிரயாணம் செய்யவேண்டிய சந்தர்ப்பம் நேரிட்டது. வண்டி புறப்பட்டதும் நான் உட்கார்ந்திருந்த பெட்டியின் கடைசி வரிசையில் ஏகக் கலாட்டாவாக இருந்தது. டிக்கெட் பரிசோதகரும், பிரயாணிகளில் இருவரும் பலத்த வாக்குவாதம் செய்து கொண்டிருந்தார்கள். கடைசியில் டிக்கெட் பரிசோதகர் என் பக்கம் வந்ததும் அவர் வாயிலாக விவரம் அறிந்தேன். அதாவது மேற்கூறிய பிரயாணிகள் இருவரும் டிக்கெட் வாங்காமல் திருவனந்தபுரத்திலிருந்து வண்டியில் ஏறவும் இதை எவ்விதமோ அறிந்த டிக்கெட் பரிசோதகர் அவர்கள் பின்னால் அதே பெட்டியில் குதித்து ஏறி அவர்களிடம் டிக்கெட் கேட்டிருக்கிறார். காரசாரமான பேச்சுக்குப் பிறகு அவர்கள் இரட்டிப்புக் கட்டணம் கொடுத்ததாகவும் அறிந்தேன். டிக்கெட் வாங்காமல் பிரயாணம் செய்வதை ஒரு சாமர்த்தியமான காரியம் என்பதாகத் தான் மேற்கூறிய வாலிபர்கள் கருதினார்கள் போலும். ஏனெனில் அவர்களைக் கண்டால் ஏழ்மை நிலை அறியாத ஆடம்பரப் பிரியர்களாகத்தான் தோன்றியது. இதுபோன்ற எத்தனையோ சம்பவங்கள் இந்திய ரயில்வேக்களில் நடைபெறுகின்றன. டிக்கெட் இல்லாமல் பிரயாணம் செய்து இறுதியில் பொது ஜனங்களின் தலையில் கட்டண உயர்வு என்ற சுமையைத் தூக்கி வைப்பதற்குக் காரணம் நாங்கள் தான் என்பதை இத்தகைய நபர்கள் அறிந்து நேர்மையாக நடப்பார்களாக.

குண்டறை
30—5—49 விஜயம் நாகேந்திரன்



## ★ பெயர் மாற்றம்

மே மாதம் 29ம் 'கல்கி'யில், ஒரு கிராமவாசி தாம் கண்ட ராஜாஜி ஹாலைப் பற்றி எழுதியிருந்தார்.

சென்னையில் ராஜாஜி ஹாலில் உள்ள படங்கள் மட்டும் என்ன, சென்னை நகரின் சிறந்த பல பகுதிகள் இன்னும் நம் அடிமைச் சின்னங்களாகவே இருந்து வருகின்றன. முக்கியமாக சென்னையின் சிறந்த சாலைகளில் ஒன்று மவுண்ட்ரோட் என்ற பெயருடன் வழங்குகிறது. இது மட்டுமா? சென்னை நகர மக்கள் மாலை நேரத்தை உல்லாசமாகக் கழிக்கச் செல்லும் பூங்காக்களின் பெயர்கள் எல்லாம் ஆங்கிலத்திலும் ஆங்கிலேயர் பெயரிலும்தான் உள்ளன. உதாரணமாக, நேப்பியர் பார்க், பீபில்ஸ் பார்க், ராபின்ஸன் பார்க் இவற்றைச் சொல்லலாம். இதைத் தவிர சென்னையின் இதயம் போன்றதும், சிறந்த வியாபாரப் பகுதியும் துறைமுகம் அமைந்துள்ள பகுதியின் பெயர் ஜார்ஜ் டவுன்! சிறந்த கலைக் கழகங்களின் பெயர்கள், ஸ்டான்லி காலேஜ், லேடி வில்லிங்டன் காலேஜ், குவீன் மேரிஸ் காலேஜ் என்று இருக்கின்றன.

சென்னையின் முக்கிய வீதிகளில் பல இடங்களில் காணப்படும் சிலைகளைப் பற்றி எண்ணினாலோ மனம் நாணுகிறது. தாமஸ் மன்றோ, லார்ட் வெல்லிங்டன் போன்ற வெள்ளையர்களது சிலைகள் இன்னும் இருக்கின்றன.

நகரசபையால் நடத்தப்பெறும் சிறந்த பண்டகசாலைகளில் ஒன்றன் பெயர் மூர்மார்க்கட், நகரசபையைச் சேர்ந்த ஒரு பகுதியின் பெயர் கான்ரான்ஸ்மித் நகர், நகரசபைக் கட்டிடமோ ரிப்பன் பில்டிங்க்ஸ்.

இன்று சுதந்திர அரசாங்கத்தை நடத்தும் "செயின்ட் ஜார்ஜ் கோட்டை" கிழக்கிந்தியக் கம்பெனியை இங்கு வேரூன்றச் செய்து நம்மை அடிமைப்படுத்திய இடமாகும்.

சென்னையில் மட்டும் என்ன? வீர சிதம்பரனாரின் சுதந்திர வேட்கை வெளிப்படுத்தப்பட்ட தூத்துக்குடியின் நகரசபை மண்டபம் சிதம்பரனார் பட்ட அல்லல்கட்கெல்லாம் காரணனான ஆஷ் துரையின் பெயரால் விளங்குகிறதாம்.

இந்த நிலை மாறி, இந்தியத் தியாகிகளின் பெயர்களை இத்தகைய பொது இடங்கட்கு இட்டு அவர்களது பெயர்கள் மறையா திருக்க முயற்சி செய்யும் காலம் வருவது என்றோ?

ஆங்கில ஆதிக்கத்திற்கு இறுதி வரை இடம் கொடாது போரிட்டு மாண்ட வீரன் கட்டபொம்மன் பெயரையும் சிதம்பரனாருக்கு எண்ணிலா இன்னல் விளைத்த ஆஷ் துரையைப் பழிக்குப் பழி வாங்க எண்ணி அவனையும் சுட்டுத் தன்னையும் சுட்டுக் கொண்ட வாஞ்சி அய்யரையும் எவ்வளவு பேர் மறந்து விட்டனர். அவரது பெயர் நிலைத்து இருக்கும் வகையில் தூத்துக்குடி மண்டபத்துக்கு வாஞ்சி மண்டபம் என்றும், மற்றும் இது போன்ற மறைந்த மாவீரர்களின் பெயர்களைப் பொதுப் பூங்காக்கள், தெருக்கள் முதலிய இடங்களுக்கு இடும் நாள் எந்நாளோ?

சென்னை
30—5—49 கல்யாணசுந்தரம்

சில முக்கியமான இடப் பெயர்களை மாற்ற வேண்டியது அவசியந்தான். ஆனால் ஸ்தாபனங்களின் பெயர்களையெல்லாம் மாற்றுவதாக இருந்தால் ஒரே குழப்பமாக முடியும் என்று அஞ்சுகிறோம்.— ஆசிரியர்.

---

வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25ஐ '[illegible]!' என்ற கடிதம் எழுதிய கோவை ஸ்ரீ ந. ஸ்ரீனிவாசனுக்கும், 'பெயர் மாற்றம்' என்ற கடிதம் எழுதிய சென்னை ஸ்ரீ கல்யாணசுந்தரத்துக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.



விலை

ரூ. 5/-

மிகக் கச்சிதமாக நவீனமாக இருக்கிறது! அதுதான் புதிய கோல்டன் ப்ளாட்டினம் பேனா! — வழவழப்பான ஸ்ட்ரீம்லைன் பாரல், பாதி மட்டும் வெளியிலுள்ள முள், க்ளிப்புடன் இருக்கத் திறக்குமாறு பளபளப்பான நிக்கல் வெள்ளியினால் செய்யப்பட்ட உறை இவைகளுடன் கூடியது. நீலம் பச்சை, ஊதா, கரும் சிகப்பு வர்ணங்களில் கிடைக்கும். இந்த பிரபல பேனாக்களின் விற்பனை தாற்காலிகமாக மிகவும் குறைந்திருக்கின்றது. ஆனால் போதிய ஸ்டாக்குகள் பெருவாரியாக கூடிய சீக்கிரம் எதிர்பார்க்கப்படுகிறது. அதுவரையில் பொறுத்திருங்கள். மார்க்கெட்டில் போதிய அளவு சரக்கை அதிவிரைவில் கொண்டுவர எங்களால் கூடியவரை முயலுகிறோம்.

THE NEW GOLDEN

**Platignum**

MADE IN ENGLAND

முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்

பம்பாய், கல்கத்தா, மதராஸ், புதுடில்லி
கராச்சி, லாகூர், ரங்கூன், கொழும்பு




# 'ஜீவான்ஜன்'

சரீரத்தின் மேல் தடவி
தேய்ப்பதற்கும் ஆவியாக
சுவாசிப்பதற்கும்
உபயோகரமானது
ரஸாயனக் களிம்பு, மிருக
கொழுப்பு சேராதது

தயாரிப்பவர்கள்
ஜீவான்ஜன் லாபொரட்டரீஸ் லிட்
மதராஸ்–14



ஜீவான்ஜன்

ஸோல் ஏஜன்டுகள்
கே.கே. பிள்ளை & கோ
ராயப்பேட்டை, மதராஸ்–14

# ஜீவான்ஜன்

# புதிய இரு சிறந்த
# வாக்ஸால் கார்கள்



வெலாக்ஸ் 6 - (18-H. P.) குறைந்த பெட்ரோல் செலவில் சிறந்த உழைப்பு. மணிக்கு 75 மைல் வேகம். பெட்ரோல் காலன் ஒன்றுக்கு 25 முதல் 28 மைல்கள் வரை போதும்.



வைவார்ன் 4 (12 H. P.) மிகச் சிக்கனமான உயர்ந்த வண்டி. மணிக்கு 64 மைல் வேகம். பெட்ரோல் காலன் ஒன்றுக்கு 33 முதல் 35 மைல்கள் வரை போதும்.

தென்னிந்தியாவுக்கு விற்பனை உரிமையாளர்கள்:

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் லிமிடெட்,**

மதுரை, திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, புதுக்கோட்டை.

---

**சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்,**

மவுண்ட் ரோடு, சென்னை.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk. Madras







டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாசனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலை கருகருவென்று நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளுகுளுப்பையும் அளவிறந்த சுறுசுறுப்பையும் அளிக்கிறது.



**டி.எஸ்.ஆர். & கோ.,**
**கும்பகோணம்.**

மதராஸ் டிப்போ :
157, லாயிட்ஸ் ரோடு
ராயப்பேட்டை, சென்னை

### கேசரியின்
**மூன்று பிரசித்த மருந்துகள்**

•

# லோத்ரா

**கர்ப்பாசய ரோக நிவாரணி**

சங்காதோஷம், கீல் வாயு, ஆக்கமின்மை, அஜீரணம், மலச்சிக்கல், இருமல், காசம், தலைவலி, முதுகு வலி முதலியவற்றைக் குணப்படுத்தும்.

•

# அம்ருதா

**ரத்த சுத்தி டானிக்**

ரத்த சோகை, அஜீரணம், மலச் சிக்கல், மந்தமான மூளை, பலவீனம், படபடப்பு, ஞாபகமின்மை, தெளிவற்ற கண் பார்வை, தலை சுற்றல், சரும ரோகங்கள் முதலியவற்றைக் குணப்படுத்தும்.

•

# அர்க்கா

**சிறந்த ஜுர நிவாரணி**

இன்புளுயன்ஸா, டைபாய்ட், மலேரியா, முதலான ஜுரங்கள் குணமாகும். ஈரல் குலைக் கட்டிகளும் குணமாகும்.

•

**விவரங்களுக்கு எழுதுங்கள்**

## கேசரி குடீரம் லிட்.

ராயப்பேட்டை, மதராஸ் - 14

